# அறிவோம் சைவ சமயம்



ஆசிரியர்

**மீனாகுமார் வைகுண்டம்**

**திருநந்திதேவர் சிவனடியார் திருக்கூட்டம் அறக்கட்டளை**

**5/49, வினோபா நகர், சித்தாலபாக்கம், சென்னை – 600 131**

http://www.saivasamayam.in

தொடர்பு : + **91–99629 93193**

**saivasamayam.in@gmail.com**

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.

தென்னாடுடைய சிவனே போற்றி!எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !
ஏகம்பத்துறை எந்தாய் போற்றி!பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி !
ஆரூா் அமா்ந்த அரசே போற்றி!சீரார் திருவையாறா போற்றி !
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி! இன்றெனக்கு ஆரமுதுஆனாய் போற்றி!
அண்ணாமலை எம் அண்ணா போற்றி! கண்ணாரமுதக் கடலே போற்றி !
காவாய் கனக திரளே போற்றி!கயிலை மலையானே போற்றி போற்றி !



# அறிவோம் சைவ சமயம்


ஆசிரியர்

**மீனாகுமார் வைகுண்டம்**

**திருநந்திதேவர் சிவனடியார் திருக்கூட்டம் அறக்கட்டளை**

**5/49, வினோபா நகர், சித்தாலபாக்கம், சென்னை – 600 131**

http://www.saivasamayam.in

தொடர்பு : + **91–99629 93193**

**saivasamayam.in@gmail.com**

# அறிவோம் சைவ சமயம்

## பொருளடக்கம்






காணிக்கை : ரூ.25/–

# 1. கேட்டதெல்லாம் கொடுப்பான் சிவபெருமான்

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்பார் ஔவை பிராட்டி. கிடைத்தர்க்கு அரிய மானிட பிறவியை, இறைவனை உணர்ந்து ஆடிப்பாடி அனுபவிக்காமல், வீணான சடப்பொருளோடு போக்கிவிட்டுப் பின்னர், இறக்கும் தருவாயில், பிறவியை வீணாக்கிவிட்டேனே என்று புலம்புவது அறிவுடையவர் செயலாகுமோ ? இன்றைய கலி காலத்தில் பல மாயைகள் பேயாட்டம் ஆடி, நம்மை ஒழுக்கமாக வாழவும், நல்ல சுகத்துடன் இன்பமாக வாழவும் தடுத்து, சவால் விட்டு பல சோதனைகள் தருகின்றன. இந்த துன்பங்களிலிருந்து எல்லாம் விடுபட்டு, நிம்மதியாக நாம் இறைவனை உணர்ந்து இன்பமாக ஆடிப்பாட வேண்டுமானால், அது நாம் புண்ணியம் செய்திருந்தால் மட்டுமே கைகூடும். இறைவன் இருக்கிறான் என்று பிறர் கூறுவதை நாம் ஏற்றுக் கொண்டாலும், அவன் இருந்து அற்புதங்கள் பல புரிவதை நாமே நம் அனுபவத்தில் உணரும் போது தான், நாம் அவனுக்கு ஆளாகி அடிமையாகிறோம். இறைவன் என்பவன் நமக்கு ஒரு போதும் துன்பத்தைக் கொடுக்கவே மாட்டான். நாம் அவனிடம் முறையிட்டு கேட்பதை அப்படியே கொடுப்பான். ஒரு தாய் தன் குழந்தையை வளர்ப்பது போல அவன் நம்மை வளர்க்கிறான். நமக்கு வேண்டியவற்றை வேண்டியவாறே கொடுக்கிறான்.

அவ்வாறாக, நாம் நம் இறைவனைப் பற்றி முழுமையாக அறியவும், அவனை அடையும் வழிகளை நமக்கு காட்டுவதாகவும் அமைவதே சைவ சமய நெறியாகும். இந்த பிரபஞ்ச வரலாற்றில் எண்ணற்ற சமயங்கள் வந்தன, காணாமல் போயின. இனியும் வரும், காணாமல் போகும். ஆனால், உண்மை என்றுமே நிலைத்திருக்கும். ஆகையால், மெய்ச்சமயமாம் சைவசமயம் உலகின் வரலாற்றிலேயே தொன்மையான சமயமாக என்றும் இருப்பதாகும். அந்த சைவ சமய நெறியின் அடிப்படை உண்மைகளையாவது நாம் ஒவ்வொருவரும் தெரிந்து கொண்டு இறைவனை வணங்குவது இன்றியமையாததாகும். ஆகவே, இந்த பகுதியில் நாம் சைவ சமயத்தின் அடிப்படை செய்திகளையும் அவனை அடைய வழிகாட்டும் தமிழ் வேதமான பன்னிரு திருமுறைகளிலிருந்து சில பாடல்களையும், நம் வீட்டில் எவ்வாறு இறைவனை வழிபட வேண்டும் என்ற அடிப்படை செய்திகளையும் நாம் காண்போம். இது உங்களின் இனிய சிவ பயணத்தையும் அனுபவத்தையும் துவக்குவதற்கான வழிகாட்டி. இதை கடந்து செல்பவர்கள், பன்னிரு திருமுறைகளை தினம் ஓதியும், உருத்திராக்கம், திருநீறு

அணிந்தும், ஐந்தெழுத்து மந்திரங்களை ஓதியும், சைவ சமய சாத்திர நூல்களை உற்ற குருவின் துணையோடு உபதேசம் பெற்றும் கற்றும் மேல் நிலைகளுக்கு செல்ல வேண்டும்.

## 2 இறைவனும் அவனை அடையும் வழியும்

இறைவன் ஒருவனே என்று உலகின் தொன்மையான நம் சைவ சமயத்தில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. பிறப்பு இறப்பு இல்லாத அந்த ஓர் இறைவன், மங்கலமானவர், மலங்கள் (குற்றங்கள்) அற்றவர். ஆகையால், செம்மையான பொருளான அவருக்கு நாம் சிவன் என்று பெயர் சூட்டியுள்ளோம். அவர் என்றும் உள்ளவர். அவர் எல்லையற்ற சக்தியாகிய ஆற்றலை உடையவர். அவருடைய சக்தியை ஒரு பெண்ணாக உருவகித்து நாம் சக்தி என்கிறோம். சக்தி என்பது சிவத்திற்குள்ளேயே அடங்கி நிற்கும் சிவனின் ஆற்றல். இதுவே மாதொருபாகன் திருவுருவ விளக்கம். இறைவன் பிறப்பு, இறப்பு, பந்தம், பாசம், அன்பு, உறவு, நீளம், அகலம், காலம், மொழி என்று எவற்றையும் கடந்தவர். பந்தமும் பாசமும் அற்றவருக்கு குடும்பமும், குழந்தைகளும் ஏது ? அறத்தை நிலைநாட்டும் பொருட்டு, அவரிடமிருந்து தோன்றிய சக்திகளை நாம் அவர் குழந்தைகளாக பாவித்து, விநாயகர், பைரவர், வீரபத்திரர், முருகர் என்று பெயரிட்டு, நமக்கு புரியும் குடும்ப முறையில் பாவித்து வணங்குகிறோம். நாம் எப்படி வாழ வேண்டும் என்று நமக்கு காட்டுவதற்க்கு அவரே குடும்பமாக வாழ்ந்தும் காட்டுகிறார்.

என்றும் இருக்கும், கண்களுக்குத் தெரியாத, எண்ணற்ற உயிர்களுக்கு அறிவு விளக்கம் கொடுத்து, அவற்றை முக்தி என்ற நிரந்தர இன்பத்தில் அழுத்தும் பொருட்டு, நம் தலைவனாகிய சிவபெருமான் பெருங் கருணை கொண்டு ஐந்து தொழில்களை மேற்கொள்கிறார். முறையே, படைத்தல், காத்தல், ஒடுக்குதல்(அழித்தல்), மறைத்தல், அருளல். இந்த ஐந்து தொழில்களையும் பல்வேறு கருவிகளை பயன்படுத்தி செய்கிறார். படைத்தலுக்கு பிரம்மனையும், காத்தலுக்கு விஷ்ணுவையும், ஒடுக்குதலுக்கு உருத்திரனையும், மறைத்தலுக்கு மகேஸ்வரனையும் , அருளலுக்கு சதாசிவத்தையும் கருவியாக கொண்டு செய்கிறார். சிவபெருமானைத் தவிர மற்ற யாவும் அவருக்குக் கருவிகளே. அவர்கள் அனைவரும் பிறப்பர், இறப்பர்.

நாம் வாழும் இந்த அண்டத்தைத் தீர ஆராய்ந்து பார்த்தால், என்றுமே அழிவில்லாததாக மொத்தம் மூன்று அடிப்படைப் பொருட்கள் இருப்பது புரியும்.

1. இறைவன், 2. நம் போன்ற உயிர்கள், மற்றும் 3. உயிரற்ற பொருட்களை உள்ளடக்கிய பாசம். நம் போன்ற உயிர்கள் பிறந்து, இறந்து மீண்டும் மீண்டும் பிறந்து இறக்கும் தன்மையுடையது. இதுவே பிறவிச் சுழல் எனப்படும். இந்தத் துன்பச் சுழலில் இருந்து விடுபட்டு பிறவியில்லா முக்தியடைய வேண்டுமானால், பிறப்பு இறப்பில்லாத சிவபெருமானை வணங்குவதால் மட்டுமே கைகூடும். அதுவே முக்தி. ஆனால், உயிர்களை சிவபெருமானோடு அண்ட விடாமல் தடுப்பது, இந்த உலகில் உள்ள சடப்பொருளாகிய பாசம் (ஆணவப்பொருள்). சில உதாரணங்கள்: ஆணவம், மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை. சைவ சித்தாந்தம், இறைவனை பதி என்றும், உயிர்களை பசு(ஆன்மா) என்றும், மற்ற பந்த பாசத்தை, பாசம் என்றும் கூறுகிறது. இதுவே முப்பொருள் உண்மையாகும். திருமந்திரத்தில் வரும் இந்த செய்யுளைக் கவனியுங்கள்:

**பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்**
**பதியினைப் போல் பசு பாசம் அனாதி**
**பதியினைச் சென்று அணுகாப் பசு பாசம்**
**பதி அணுகில் பசு பாசம் நில்லாவே.** – திருமந்திரம்

இறைவன் அனாதியாய் இருப்பவர். அவரைப் போலவே, உயிர்களும், பாசமும் அனாதியாய் இருப்பவை. உயிர்களையும், பாசத்தையும் சிவபெருமான் படைக்கவில்லை. சிவபெருமான் என்று உண்டோ, அன்றிலிருந்தே, இந்த உயிர்களும், பாசமும் உள்ளவை. உயிர்களுக்கு பாசத்தை நீக்கி அறிவு விளக்கம் கொடுத்து இடையறாத பேரின்பம் அருளவே, உயிர்களுக்கு உடலைப் படைத்து உலகத்தையும் படைத்துள்ளான். பிறவிச் சுழலில் உழலும் உயிர்கட்கு, சிவபெருமான் ஒருவரே முக்தி அளிக்கும் வல்லமை பெற்றவர். வேறு எவருக்கும் அந்த வல்லமை கிடையாது. ஆகவே, உயிர்களாகிய நாம், நமக்கு கொடுக்கப்பட்டிருக்கும் இந்த உடலாகிய கருவியைக் கொண்டு சிவபெருமானைத் தொழுது அவர் திருவடி சேர வேண்டும். இதுவே பிறவியின் நோக்கம். பல பிறவிகளில் சிவ புண்ணியம் செய்தால் மட்டுமே, சிவபெருமானை உணர்ந்து அவரைத் தேடித் தொழுது, அவரின் அருள் பெற்று திருவடிப் பேறு கிட்டும். மற்றவர்கள் சிவ புண்ணியங்கள் செய்யும் வரை பிறவிச் சுழலில் உழன்று கொண்டே இருப்பர். சிவபெருமானின் ஐந்து தொழில்களை செய்ய உதவி கரணமாக இருக்கும் மற்றபிற தேவர்களையும், பிரம்மன், விஷ்ணு, போன்ற தேவர்களை வணங்கினாலும், முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை வணங்கினால் மட்டுமே திருவருளும் முக்தியும் கிட்டும். ஆகவே, சிறுதெய்வ

வழிபாட்டில் நம் பொன்னான காலத்தை வீணடிக்காமல், முழுமுதற் கடவுளாகிய பிறப்பும் இறப்பும் ஆதியும் அந்தமும் இல்லாத சிவபெருமானை வணங்குங்கள் என்று நம் சமயாச்சாரியார்கள் அறுதியிட்டுக் கூறுகிறார்கள். ஓம் நமசிவாய.

இயல்பாக உருவம் இல்லாத சிவபெருமான், நம் மீது பெருங்கருணை கொண்டு நாம் அனைவரும் கண்டு உணரும் வண்ணம் அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்று நிலைகளில் தன்னை உயிர்களுக்கு உணர்த்தி அருள்கிறார். கண்களால் காண முடியாத பொருளாக, உணர மட்டுமே முடியும் நிலையில் அருவமாகவும், நீண்ட சடை கொண்டு, பிறை, கங்கையைத் தலையில் தரித்து பல்வேறு மூர்த்தங்களாய் நாம் கண்களால் கண்டு மகிழ்ந்து வணங்கும் உருவமாகவும், சிவலிங்கமாக சதாசிவ மூர்த்தியாக அருவுருவ நிலையில் தன்னை உணர்த்தி உயிர்களுக்கு அருள் புரிகிறார்.

உயிர்கள் தங்களோடு இணைந்தே இருக்கும் மலமாகிய குற்றத்தை நீக்கி சிவபெருமானின் திருவடியை அடைவதற்கு, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நான்கு படிமுறைகள்(வழிகள்) உள்ளன. உயிர்களாகிய ஆன்மாக்கள், இறைவனது உருவத் திருமேனிகளைத் தமக்கு புறத்தே வணங்கிச் சிவாலயத்திற்கும் சிவனடியார்களுக்கும் திருத்தொண்டு செய்தல் சரியை வழிபாடாகும். சிவாலயத்தில் திருவலகிடுதல், திருநந்தவனம் அமைத்தல், சிவனடியார்களுக்குரிய பணிகளைச் செய்தல் ஆகியன சரியையாகும். இறைவனது அருவுருவத் திருமேனியை (சதாசிவனை–சிவலிங்கத்தை) அகத்தும் புறத்தும் பூசித்தல் கிரியை வழிபாடாகும். சிவபெருமானை அகத்தே பூசித்தல் யோக வழிபாடாகும். அது மனத்தை விடயங்களின் வழியே போகாவண்ணம் நிறுத்திச் சிவத்தை தியானித்து, பின்பு தியானிப்போனாகிய தானும் தியானமும் தோன்றாமல், தியானப் பொருளாகிய சிவன் ஒன்று மாத்திரமே விளங்கப்பெற்று சமாதி நிலை அடைதலாகும். பதி பசு பாசம் என்னும் முப்பொருள் உண்மையை அறிவிக்கும் ஞான நூல்களைக் கேட்டு சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடுதல் ஞானத்தில் ஞான வழிபாடு எனப்படும். இந்த நான்கு வழிகளும் சிவபெருமானை எளிதாக அடைய நமக்கு வழிகாட்டுபவை.

## 3 சைவநெறி நூல்கள்

வேதங்களும், சிவாகமங்களும், புராணங்களும் சைவத்தின் தொன்மையைப் பறைசாற்றுவன. பன்னெடுங்காலத்திற்கு முன்பாக சிவபிரானால் நமக்கு உபதேசம் செய்யப்பட்டது அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு



**திருஞானசம்பந்தர் திருக்கடைக்காப்பு**

திருமுறை 1 – 1469
திருமுறை 2 – 1331
திருமுறை 3 – 1358

மொத்தம் பாடல்கள் 4158



**திருநாவுக்கரசர் தேவாரம்**

திருமுறை 4 – 1070
திருமுறை 5 – 1015
திருமுறை 6 – 981

மொத்தம் பாடல்கள் 3066



**மாணிக்கவாசகர் திருமுறை 8**

திருவாசகம் 656
திருக்கோவையார் 400

மொத்தம் பாடல்கள் 1056

**பன்னிரு திருமுறை தொகுப்பு**



**சுந்தரமூர்த்தி திருப்பாட்டு**

திருமுறை 7 – 1026

**திருமுறை 9 திருவிசைப்பா திருப்பல்லாண்டு 301**

திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், சேதிராயர் புருஷோத்தம நம்பி



**திருமூலர்**

திருமுறை 10
திருமந்திரம்– 3000

saivasamayam.in திருநந்திதேவர் திருக்கூட்டம்

**திருமுறை 11 பிரபந்தம் 1402**

திருவாலவாய் உடையார்(ஈசன்), காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர் கோன், சேரமான் பெருமான், நக்கீரர், கல்லாடர், கபிலர், பரணர், இளம்பெருமான் அடிகள், அதிரா அடிகள், பட்டினத்தார், நம்பியாண்டார் நம்பி



**சேக்கிழார்**

திருமுறை 12
பெரியபுராணம் – 4286

18,295 பாடல்கள் 27 ஆசிரியர்கள் 76 நூல்கள்

திருமுறையே சைவநெறி கருவூலம்.

உ
சிவமயம்

*அநாதியானதும், அநாதியான முதல் நூல்களை உடையதும் எனக் கொள்ளப்படும் சைவ சமயத்தின் பிரமாண நூல்கள்*

திருமுறை சார்ந்த நூல்கள்
பன்னிரு திருமுறை 12 - தோத்திரம்
- ✓ திருக்கடைக்காப்பு (திருமுறை 1,2,3 திருஞானசம்பந்தர்)
- ✓ தேவாரம் (திருமுறை 4,5,6, திருநாவுக்கரசர்)
- ✓ திருப்பாட்டு (திருமுறை 7, சுந்தரர்)
- ✓ திருவாசகம், திருக்கோவையார் (திருமுறை 8, மாணிக்கவாசகர்)
- ✓ திருவிசைப்பா, திருப்பல்லாண்டு (திருமுறை 9, 9 ஆசிரியர்கள்)
- ✓ திருமந்திரம் (திருமுறை10, திருமுலர்) பிரபந்தம் (திருமுறை 11, 12 ஆசிரியர்கள்)
- ✓ பெரியபுராணம் (திருமுறை 12, சேக்கிழார்)
- ➢ திருத்தொண்டர் புராணசாரம்
- ➢ திருப்பதிக்கோவை
- ➢ திருப்பதிகக்கோவை
- ➢ திருமுறை கண்டபுராணம்
- ➢ சேக்கிழார் புராணம்
- ➢ திருத்தொண்டர் திருநாமக்கோவை

வீரசைவ நூல்கள்
- சித்தாந்த சிகாமணி
- பிரபுலிங்க லீலை
- ஏசு மத நிராகரணம்
- இட்டலிங்க அபிடேகமாலை
- கைத்தல மாலை
- குறுங்கழி நெடில்
- நெடுங்கழி நெடில்
- நிரஞ்சன மாலை
- பழமலை அந்தாதி
- பிக்ஷாடன நவமணி மாலை
- சிவநாம மகிமை
- வேதாந்த சூடாமணி
- திருத்தொண்டர்மாலை
- ஊத்துக்காடு வேங்கடசுப்பையரின் ஸப்த ரத்னம்

திருநெறி
- ○ வேதம் 4 – அருநெறிய மறை: உலகிற்கு வேண்டிய பொது அறம் சொல்வது
- ○ சிவ ஆகமம் 28 – பெருநெறி: சத்திநிபாதத்திற்குரிய சைவ நுட்பங்களைச் சொல்வது

சைவ சமய சாத்திர நூல்கள்
1. திருவுந்தியார் - திருவியலூர் உய்யவந்த தேவநாயனார்
2. திருக்களிற்றுப்படியார் - திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்
3. சிவஞானபோதம் - மெய்கண்ட தேவநாயனார்
4. சிவஞான சித்தியார் - திருநறையூர் அருள்நந்தி தேவநாயனார்
5. இருபா இருபஃது - அருள்நந்திசிவாசாரியார்
6. உண்மை விளக்கம் - திருவதிகை மனவாசகங்கடந்தார்
7. சிவப்பிரகாசம் - உமாபதிசிவாசாரியார்
8. திருவருட்பயன் - உமாபதிசிவாசாரியார்
9. வினாவெண்பா - உமாபதிசிவாசாரியார்
10. போற்றிப்பஃறொடை - உமாபதிசிவாசாரியார்
11. உண்மைநெறி விளக்கம் - உமாபதிசிவாசாரியார்
12. கொடிப்பாட்டு - உமாபதிசிவாசாரியார்
13. நெஞ்சுவிடுதூது - உமாபதிசிவாசாரியார்
14. சங்கற்ப நிராகரணம் - உமாபதிசிவாசாரியார்

புராண நூல்கள்
- திருவிளையாடற் புராணம்
- மதுரைக் கலம்பகம்
- மதுரைக் கோவை
- மதுரை மாலை
- காஞ்சிப் புராணம்
- கச்சி ஆனந்த ருத்ரேசர் பதிகம்
- கச்சித் திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு
- சிதம்பர மும்மணிக் கோவை
- திருவாரூர் நான்மணி மாலை
- சிதம்பர செய்யுட் கோவை
- காசிக் கலம்பகம்
- திருக்குற்றாலக் குறவஞ்சி
- பிரபந்தத்திரட்டு
- இரட்டைமணி மாலை
- கந்த புராணம்

பிற நூல்கள்
- சித்தாந்த சாத்திரம்
- சொக்கநாத வெண்பா
- சொக்கநாத கலித்துறை
- சிவபோக சாரம்
- முத்தி நிச்சயம்
- சோடசகலாப் பிராத சட்கம்
- திருப்புகழ்
- முத்துத்தாண்டவர் பாடல்கள்
- நீலகண்டசிவன் பாடல்கள்
- நடராசபத்து

*இன்னும் எண்ணற்ற நூல்களும் உள.*

ஒட்டக்கூத்தர், புகழேந்தி, பட்டினத்தார், தாயுமானார், சிவப்பிரகாசர், குமரகுருபரர், சைவத் திருமடத்து தலைவர்கள், அருளாளர்கள், ஔவையார், தண்டபாணி சுவாமிகள், சிதம்பர சுவாமிகள், பாம்பன் சுவாமிகள், மீனாட்சி சுந்தரம்பிள்ளை, முத்துத்தாண்டவர், மாரிமுத்தாப்பிள்ளை, அருணாச்சலக் கவிராயர், கிருஷ்ணபாரதி, சுத்தானந்த பாரதி, 18 சித்தர்கள் ஆகியோரது நூல்கள்

தமிழ் வேதங்கள். அந்த உபதேசங்கள், திருக்குறள் மற்றும் பல சங்ககால நூல்களில் நம்மிடமுள்ளன. வடமொழி வேதங்களாகிய ரிக், யசூர், சாமம், அதர்வனம் அதே கருத்துக்களைக் கொண்டுள்ளன. உலகிற்கு பொதுவான அறங்களைச் சொல்வதாகிய இது அருநெறிய மறை எனப்படும். சைவத்திற்கு சிறப்பு சேர்ப்பது சிவ ஆகமங்கள். மொத்தம் 28. சிவ ஆகமம் சத்திநிபாதத்திற்குரிய நுட்பத்தைச் சொல்வது. இது பெருநெறி எனப்படும். இந்த கருத்துக்களை தற்போதைய காலத்தில், தமிழின் தோத்திர நூல்களாக பன்னிரு திருமுறைகளும், சாத்திர நூல்களாக 14 நூல்களும் கொண்டுள்ளன.

திருக்கோவில்களிலும், வீட்டிலும் திருமுறை பதிகங்களை தினமும் ஒத வேண்டும். இவை நமக்கு பெரும் நன்மையைப் பெருக்கி, தீயவற்றை விலகச்

செய்யும். குடும்பத்தில் மகிழ்ச்சி பெருகும். திருமுறையே வாழ்வின் நெறிமுறை. நாம் ஒவ்வொருவரும் கண்டிப்பாக திருமுறை பாடல்களை தினமும் ஓத வேண்டும். குழந்தைகளுக்கு திருமுறை பாடல்களும், சைவ சமய நெறியை அறிவிப்பதும் பெற்றோர்களின் மிக முக்கியமான கடமை. நம் நூல்கள் யாவும் காலத்தை வென்றவை. எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டிருந்தாலும் இன்றும், என்றும் ஒரு சிறு எழுத்து பிறழாமல் உண்மை உரைப்பவை. உலக வரலாற்றில் வேறு எந்த சமயத்திற்கும் இந்த அருள் கிடையாது. இது இறைவனின் திருவருளால் மட்டுமே கைகூடும்.

## 4 சைவ சின்னங்கள்

திருநீறும், உருத்திராக்கமும், பஞ்சாக்கர மந்திரமும் (நமசிவாய, சிவாயநம, சிவசிவ ஐந்தெழுத்து மந்திரம்) முக்கியமான சைவ சமய சின்னங்களாகும். தீமைகளினின்றும் நம்மைப் பாதுகாத்து இறைவனின் பெரும் கருணையை அடையச் செய்யும் கருவிகளாக இவை விளங்குகின்றன. குற்றமற்ற பசுவின் சாணத்தை நெருப்பினாலே சுடுவதனால் உண்டாகும் நீறே தூய திருநீறாகும். வெண்மை நிறத் திருநீறே அணியத்தக்கது. சமய தீட்சை பெற்றோர் மாத்திரமே திருநீற்றை நீரில் கரைத்து மூன்று கோடுகளாக அணியும் தகுதியுடையோர். மற்றோர் நீரில் கலவாது பொடியாக அணிதல் வேண்டும். திருநீற்றை மூன்று கோடுகளாக, இரண்டு கடைப்புருவ எல்லை வரை அணிய வேண்டும். ஒவ்வொரு கோட்டிற்கும் இடையே ஒவ்வொரு அங்குல இடைவெளி வேண்டும். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களை நீக்கி இறையருள் பெறுவதைக் குறிப்பதே, மூன்று கோடுகளாக அணிவது உணர்த்தும். தலை, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள் இரண்டு, புயங்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, விலாப்புறம் இரண்டு, முதுகு, கழுத்து என்னும் 16 இடங்களில் அணியலாம். திருநீற்றை வடக்கு முகமாகவோ, கிழக்கு முகமாகவோ தரித்தல் வேண்டும். தரிக்கும் போது, சிவபெருமானை சிந்தையில் வைத்து திருநீறு நிலத்தில் சிந்தாத வண்ணம் நெற்றியை மேலே தூக்கி ''சிவசிவ'', ''நமசிவாய'' என்ற பஞ்சாக்கர மந்திரத்தை ஓதி அணிய வேண்டும். தூங்கி எழுந்த உடனும், தூங்குவதற்கு முன்னும், நீராடியவுடனும், பூசைக்கு முன்னும் பின்னும், உணவுக்கு முன்னும் பின்னும், கடமைகளைச் செய்யும் போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் கட்டாயமாகத் திருநீறு அணிய வேண்டும். திருநீற்றை பட்டுப் பையிலோ, சம்புடத்திலோ மட்டும் வைக்க வேண்டும். குரு, சிவனடியார் திருநீறு கொடுத்தால், அவர்களை வணங்கி, அடக்கத்துடன் இரு கைகளையும் நீட்டி வாங்கிக் கொள்ள வேண்டும்.

திருநீற்றுக்கு மேலே குங்குமமேனும், சந்தனமேனும் அணியலாகாது. திருநீற்றுக்குக் கீழே, புருவ மத்தியில் குங்குமம் தரிக்கலாம். திருநீற்றை ஊதுவதோ, கோவில் தூண்களிலோ, வேறு இடங்களில் கொட்டுவதோ, காலில் படுவதோ, கீழே சிந்துவதோ, கூடவே கூடாது.

உருத்திராக்கம் என்பது உருத்திரனது கண் எனப் பொருள்படும். முப்புரத்து அசுரர்களாலே தமக்கு ஏற்பட்ட துன்பங்களை தேவர்கள் சிவபெருமானிடம் எடுத்துரைத்த போது, சிவபிரானது மூன்று கண்களில் இருந்தும் சிந்திய மணியே உருத்திராக்கமாகும். பத்தினிப் பெண்களுக்கு திருமாங்கல்யம் எத்தனை முக்கியமோ, அது போல சைவர்களுக்கு உருத்திராக்கம் அணிவது மிக முக்கியம். முறையாக உருத்திராக்கம் அணிந்து இறைவனிடம் அன்பு பூண்டார்க்கு உடல் நலமும், செல்வ வளமும், நெடு வாழ்வும், இன்ப வாழ்வும் இப்பிறப்பில் பெருகும். மறு உலகில் இறைவன் திருவடியினை எய்தி மாறா இன்பம் துய்த்து மகிழ்வர். உருத்திராக்கத்தை யார் வேண்டுமானாலும் அணியலாம். எல்லா நேரத்திலும் அணிந்து இருக்கலாம். தூங்கும் போதும், உண்ணும் போதும் எப்போதும் அணிந்திருக்கலாம். குழந்தைகள் முதல் பெண்கள், பெரியவர்கள் வரை, ஒரே ஒரு மணியாக, சிவப்பு கயிற்றில் கட்டி, கழுத்தில் தெரியும் படியாக எப்போதும் அணிந்திருக்க வேண்டும். கழற்றவே கூடாது. பெண்கள் எல்லா நேரங்களிலும் அணிந்திருக்கலாம். நீத்தார் கடன், பெண்கள் தீட்டு, கணவன்–மனைவி தாம்பத்ய நேரங்களிலும் கண்டிப்பாக அணியலாம். சிறுவர் சிறுமியர் அணியும் போது அவர்களின் படிப்புத்திறன் மேலோங்கும். பெண்கள் அணிந்திருக்கும் போது, தீர்க்க சுமங்கலியாக மஞ்சள் குங்குமத்தோடு வாழ்வார்கள். அவர்களுடைய கணவருக்கும் தொழிலில் வெற்றியும், இல்லத்தில் லட்சுமி கடாச்சமும் நிறைந்திருக்கும். ஆகையால், எல்லோரும் கண்டிப்பாக உருத்திராக்கம் அணிய வேண்டும். உருத்திராக்கம் அணிந்தால் தான் உடலும் உள்ளமும் தூய்மை அடையும். மருந்துக்குப் பத்தியம் எவ்வளவு அவசியமோ அது போல, உருத்திராக்கம் அணிபவர்களும் மது அருந்துதல், புகை பிடித்தல், புலால் உண்ணுதல் ஆகியவற்றைப் படிப்படியாக விட்டுவிட முயற்சிக்க வேண்டும். (முக்கியமாக மாடு பன்றி மாமிசத்தை எப்போதும் சாப்பிடக்கூடாது.) உருத்திராக்க மணிகளை 54/108 மாலையாக அணியும் போது, சந்தியாவந்தனம், சிவபூசை, செபம், தேவார திருவாசக பாராயணம், புராண படனம், சிவாலய தரிசனம் போன்ற நேரங்களில் மட்டும் தரிக்க வேண்டும். இது இல்வாழ்வில் இருப்பவர்களுக்கு பொருந்தும்.

சைவர்கள், நமசிவாய, சிவாயநம, சிவசிவ ஆகிய பஞ்சாக்கர மந்திரத்தை எப்போதும் உச்சரிக்க வேண்டும். தினம் குறைந்தது 108 முறை ஓதலாம். பேரண்டத்திலேயே மிக உயரிய ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதுவதால், நம் உள்ளம் தூய்மை அடைந்து நம் குற்றங்கள் விலகி இறைவன் திருவருள் கிடைக்கச் செய்யும். நம் துன்பங்கள் தீவினைகள் யாவும் மறைந்து போகும். உரிய தீக்கை பெற்று ஓதுவது சிறப்பு.

## 5. சமய குரவர்கள் மற்றும் சந்தான குரவர்கள்

இறைவனை அடைவதற்குரிய வழிகளை நமக்கு காட்டுபவர்களே குருமார்கள். 7 ஆம் நூற்றாண்டில் சமண பௌத்த சமயங்கள் அரசர்களின் துணையோடு பரவிய போது, சைவ சமயத்தை இறைவன் திருவருளால் நிலை நிறுத்தியவர்களில் நால்வருக்கு முக்கிய பங்குண்டு. தேவாரம் பாடிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் மற்றும் திருவாசகம், திருக்கோவையார் பாடிய மாணிக்கவாசகர் நால்வர்களே சமயக் குரவர் (குரு) எனப்படுவர். 3 வயதிலே சிவபெருமானின் திருவருளால் உமையம்மையின் திருமுலைப்பாலை உண்டு சிவஞானம் பெற்று பல அற்புதங்கள் செய்து 16 வயது வரை வாழ்ந்து சைவத்தை நிலைநாட்டியவர் திருஞானசம்பந்தர். சமண சமயத்தில் உழன்று, இறைவன் திருவருளால் சைவ சமயம் தழுவி, தேவாரம் பாடி 81 வயது வரை வாழ்ந்து முக்தியடைந்தவர் திருநாவுக்கரசர். இறைவனின் திருவுருவமே சுந்தரராக அவதரிக்கப் பெற்று 18 வயது வரை வாழ்ந்து பல்வேறு செயற்கரிய அற்புதங்களை செய்தவர் சுந்தரர். பாண்டிய நாட்டிலே சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்பட்டு திருவாசகம், திருக்கோவையார் பாடி தேனமுதத்தைத் தந்து 32 வயது வாழ்ந்தவர் மாணிக்கவாசகர். பின்னர் வந்த சந்தான குரவர்களான மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார் ஆகியவர்கள் நமக்கு சைவ சாத்திர நூல்களை அருளிய குருமார்கள். 63 நாயன்மார்களும் செயற்கரிய சிவதொண்டு புரிந்து நமக்கு வழிகாட்டியாக இருக்கும் குருமார்கள். இவர்களின் வரலாற்றை முழுவதுமாக படித்து, கேட்டு அறிந்து நம் குழந்தைகளுக்கும் சொல்லிக் கொடுப்பது நம் தலையாய கடமையாகும். நாயன்மார்களே நம் வாழ்வின் முன்னோடியாக, வழிகாட்டியாக பின்பற்ற வேண்டிய கதாநாயகர்கள்.

# ௬. செய்தி தொகுப்பு

## இறைவனின் இயல்பான நிலை

உருவமற்றவன். நிறமற்றவன். எட்டு குணங்களை உடையவன். தனக்கென்று எந்த தேவையும் இல்லாததால், செயலற்று இருப்பவன். பராபரன் எனப்படுபவன். செயலற்ற ஆற்றலாகிய பராபரையே தன்னுள்ளே உடையவன்.

## உயிர்களுக்காக எடுத்த நிலை

உயிர்களின் மீது கருணை கொண்ட சிவபிரான், உயிர்களை உய்விக்க எடுத்த உருவங்கள் மூன்று.

1. அருவம். 2. அருவுருவம். 3. உருவம்.

## உயிர்களுக்கு செய்யும் பணி

உயிர்களை உய்விக்க இறைவன் 5 தொழில்கள் செய்கிறான், முறையே, படைத்தல், காத்தல், ஒடுக்குதல், மறைத்தல், அருளல்.

## உயிர்களுக்காக இறைவன் எடுத்த உருவங்கள்

மூர்த்தங்கள் இருபத்து ஐந்து. 25.

## அண்ணாமலையார் (இலிங்கோத்பவர்)

இறைவனின் பரந்த தன்மையை எவராலும் அறிய முடியாது என்பதை விளக்கும் உருவம். பிரம்மனும் திருமாலும் தாமே உயர்ந்தவரென்று ஆணவங்கொண்ட போது சோதிப்பிளம்பாய் இறைவன் தரித்த உருவம். பிரம்மனும் திருமாலும் சிவபிரானின் அடிமுடி காணாது சிவபிரானின் பிரம்மாண்ட வியாபகத்தன்மையை உணர்த்துவது.

## சந்திரசேகரர்

பிறை சூடிய சிவவடிவம். சந்திரன் வளர்வதும் தேய்வதும் காலத்தைக் குறிக்கும். சிவபிரான் ஒருவரே காலத்தை வென்றவர். சந்திரனுக்கு அருளியதை குறிக்கும்.

## தட்சிணாமூர்த்தி (தென்முகக்கடவுள்)

சிவபெருமானின் ஞான வடிவமே தென்முகக்கடவுளாகும். அறியாமை என்னும் இருளை விலக்கி ஞானம் என்னும் ஒளியைத் தந்து அருளுபவர்

தென்முகக்கடவுள். இவர் ஆலமரத்தின் கீழே சனகர், சனந்தனர், சனாதனர் மற்றும் சனத்குமாரர் ஆகிய 4 முனிவர்களுக்கு மௌன உபதேசம் செய்வதாக எழுந்தருளியிருப்பார். தெற்கு நோக்கியே அமர்ந்திருப்பர்.

## சோமாஸ்கந்தர்

சிவன், உமை, கந்தன் ஆகிய மூவரும் ஒரே இருக்கையில் காணப்படும் வடிவமே சோமஸ்கந்தராகும். சூரபத்மன், சிங்கமுகன், தாரகன் ஆகிய அசுரர்களை வதம் செய்யும் பொருட்டு சிவபிரானின் நெற்றியிலிருந்து வந்த தீப்பொறிகளாக வந்த கந்தன் அசுரர்களை வதம் செய்து அருளினார். சிவபிரானின் இந்த கருணையை உணர்த்தும் உருவமே சோமாஸ்கந்தர்.

## உமையொருபாகன் (அர்த்தநாரீசுவரர்)

ஒரே திருவுருவத்தில் இடது புறம் உமையும், வலது புறம் சிவனும் கொண்ட உருவம் உமையொருபாகனார். சிவம் வேறு சக்தி வேறு அல்ல, சிவபிரானுடைய ஆற்றலே சக்தி என்று உணர்த்தும் திருவுருவம். சிவனை மட்டுமே வழிபட்டு வந்த பிருங்கி என்னும் முனிவர், வண்டாக மாறி சிவனை மட்டும் சுற்றி வந்தார். அவருக்கு ஞானத்தை ஊட்டும் வண்ணம், சிவபிரானார் உமையொருபாகனாக உருக் கொண்டு அவருக்கு ஞானத்தை அருளினார்.

## பிச்சாடனர்

தாருகாவனத்து முனிவர்கள் வேள்விகளாலேயே அனைத்தையும் சாதிக்க இயலும் என்றும், ஈசுவரன் ஒருவன் தேவையில்லை என்றும், அவர்களது பத்தினிகளும் கற்புத் திறத்தாலே எவற்றையும் சாதிக்க இயலும் என்று ஆணவம் கொண்டிருந்தனர். இவர்களின் அகந்தையும் அறியாமையையும் அகற்ற சிவபிரான் திருவுளம் கொண்டு, கையில் பிச்சைப் பாத்திரம் ஏந்தி, மிகவும் அழகிய வாலிபனாக பிச்சாடனார் வடிவம் கொண்டார். அவரது வடிவழகில் தன்நிலை மறந்த பத்தினிகள், கற்பு நெறியிலிருந்து விலகி அவரைப் பின்தொடர்ந்தனர். தம்மிடம் பக்தி கொண்ட அடியார்கள் உய்வடைவதற்காக, அலைந்து திரிந்து அவர்களது தீவினைப் பயன்களையும் பாவங்களையும் பிச்சையாகப் பெற்று வீடுபேறு அளிப்பதே பிச்சாடனார் வடிவமாகும்.

## வீரபத்திரர்

பிரம்மனின் மகனான தட்சன் சிவபெருமானை அவமதித்து யாகம் செய்தான். இதனால் அவமானம் அடைந்த சக்தியும், தட்சனின் மகளுமான

சதிதேவி, யாகத்தீயில் விழுந்து தன்னை மாய்த்துக் கொண்டாள். தட்சனின் ஆணவத்தை அடக்க திருவுள்ளம் கொண்ட சிவபிரான், தன் சடையிலிருந்து ஒரு முடியை எடுத்து வீசினார். அது வீரபத்திரராக உருக் கொண்டு, எல்லாத் திசைகளையும் வியாபித்து நின்று தட்சனையும் , யாகத்தில் கலந்து கொண்ட அனைவரையும் அழித்தது. கருணை கொண்ட சிவபிரான் தேவர்களை உயிப்பித்தார். தட்சனையும் உயிப்பித்து ஆட்டின் தலையை பொருந்தச் செய்தார். அகங்காரமும் ஆணவமும் என்று அழிவையே தேடித்தரும் என்பதை உணர்த்தும்.

## பைரவர்

பேய், பிசாசு, பூதங்கள் ஆகிய தீய சக்திகளிடமிருந்து திருக்கோவிலையும் உயிர்களையும் பாதுகாத்து வருபவர் பைரவர். அந்தகாசுரன் என்ற அரக்கன் மிகுந்த தவங்கொண்டு யாராலும் அழிக்க முடியாத வரத்தைப் பெற்றான். அவன் தேவர்களையும் அனைவரையும் துன்புறுத்தி வந்தான். இதனை சிவபிரானிடம் தேவர்கள் முறையிட, சிவபிரான் தன் நெற்றிக்கண்ணைத் திறந்தார். அதிலிருந்து பைரவர் வெளிப்பட்டார். பைரவர் அந்தகாசுரனை அழித்தார். தன் தவறை உணர்ந்து தன்னை காத்தருளும் படி வேண்டிக் கொண்ட அந்தகாசுரனை, கருணை கொண்டு படைகளின் தலைவனாக நியமித்தார் சிவபெருமான்.

## நடராசர்

அவனன்றி ஓரணுவும் அசையாது என்று இந்த பிரபஞ்சத்தையே தன் திருநடனத்தின் மூலம் படைத்தல், காத்தல், ஒடுக்குதல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் செய்து அருளி, ஆடல் அரசனாக திகழ்வது தான் நடராசர் திருவுருவம். தில்லை அம்பலத்தில் தொடர்ந்து ஆனந்த நடனமாடிக் கொண்டிருக்கும் சிவபிரானை, பதஞ்சலி, வியாக்ரபாதர், காரைக்கால் அம்மையார் தரிசித்துக் கொண்டிருப்பதாக வரலாற்றுக் குறிப்புகள் சொல்கின்றன. சிவபெருமான் உயிர்களின் அறியாமையை போக்கி வீடுபேறு அருளும் பொருட்டு பிரபஞ்சத்தை படைத்து காத்து அருளும் திருவுருவமே நடராசர் ஆகும்.

## அட்ட வீரட்ட தலங்கள்

திருக்கண்டியூர், திருக்கடவூர், திருவதிகை, திருவழுவூர், திருப்பறியலூர், திருக்கோவலூர், திருக்குறுக்கை, திருவிற்குடி

## பஞ்ச பூத தலங்கள்

நிலம் – திருவாரூர், நீர் – திருஆனைக்கா, தீ – திருவண்ணாமலை, காற்று – திருக்காளத்தி, ஆகாயம் – சிதம்பரம்.

## திருவைந்தெழுத்து (பஞ்சாட்சரம்)

தூல மந்திரம் – நமசிவய, சூக்கும மந்திரம் – சிவயநம,

அதிசூக்கும மந்திரம் – சிவயசிவ, காரண பஞ்சாட்சரம் – சிவசிவ,

மகாகாரண பஞ்சாட்சரம் – சி

## ஐந்து சபைகள்

திருவாலங்காடு – இரத்தினசபை, சிதம்பரம் – பொற்சபை,
மதுரை – வெள்ளிசபை, திருநெல்வேலி – தாமிரசபை, திருக்குற்றாலம் – சித்திரசபை

### சப்தவிடங்கத்தலங்கள் (சுயம்பு)

திருவாரூர் – வீதிவிடங்கர், அசபா நடனம், திருக்கோளிலி – அவனிவிடங்கர், பிரமா நடனம், திருக்காறாயில் – ஆதிவிடங்கர், குக்குட நடனம், திருவாய்மூர் – நிலவிடங்கர், கமல நடனம், திருமறைக்காடு – புவனிவிடங்கர், உறப்பாச நடனம், திருநாகைக்காரோணம் – சுந்தர விடங்கர், பாராவதரங்க நடனம், திருநள்ளாறு – நகவிடங்கர், சதசன்மத்த நடனம்.

## ஏழு வகைக் கோவில்கள்

1. ஆலக்கோவில் 2. ஞாழற்கோவில் 3. கொகுடிக்கோவில்

4. இளங்கோவில் 5. மணிக்கோவில் 6. கரகக்கோவில்

7. பெருங்கோவில்

## சிவனின் ஐந்து முகங்கள்

1. ஈசான முகம் 2. தத்புருஷ முகம் 3. அகோர முகம்

4. வாம முகம் 5. சத்யோஜாதமுகம்

## தேவார பாடல் பெற்ற தலங்கள்

தேவார மூவரால் பாடல் பெற்ற தலங்கள் 274. சோழநாடு காவிரி வடகரை 63, தென்கரை 127, ஈழநாடு 2, பாண்டியநாடு 14, மலைநாடு 1, கொங்குநாடு 7, நடுநாடு 22, தொண்டைநாடு 32, துளுவநாடு 1, வடநாடு 5.

## திருவாசகத் தலங்கள்

சிதம்பரம், திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம், ஆவுடையார்கோவில், திருஉத்தரகோசமங்கை

## ஆதார தலங்கள்

மூலாதாரம் – திருவாரூர், சுவாதிட்டானம் – திருவானைக்கா
மணிபூரகம் – திருவண்ணாமலை, அநாகதம் – சிதம்பரம்
விசுத்தி – திருக்காளத்தி, ஆக்ஞை – காசி

## நடராசர் கால் மாறி ஆடிய தலம்

திருஆலவாய் (மதுரை)

## தென் கயிலாயம்

1. திருக்காளத்தி 2. திருச்சிராப்பள்ளி 3. திரிகோணமலை

## பூலோக கயிலாயம்

1. திருவையாறு 2. திருக்குற்றாலம் 3. சிதம்பரம்

## ஏழு திருமுறைகளிலும் பாடல் பெற்ற தலங்கள்

1. திருமறைக்காடு 2. காஞ்சிபுரம் 3. திருவாரூர்

## முக்தி அளிக்கும் தலங்கள்

1. திருஆரூர் – பிறக்க முக்தி, 2. சிதம்பரம் – தரிசிக்க முக்தி,
3. திருவண்ணாமலை – நினைக்க முக்தி, 4. காசி – இறக்க முக்தி

## புலியூர்கள்

1. பெரும்பற்றப்புலியூர், 2. திருப்பாதிரிப்புலியூர், 3. ஓமாம்புலியூர்
4. எருக்கத்தம்புலியூர், 5. பெரும்புலியூர்

## தாண்டவ சிறப்புத் தலங்கள்

தில்லை சித்திரக் கூடம் , பேரூர் – ஆனந்த தாண்டவம்
திருவாரூர் – அசபா தாண்டவம்,
மதுரை – ஞானசுந்தர தாண்டவம்,

புக்கொளியூர் – ஊர்த்துவ தாண்டவம்,

திருமுருகன்பூண்டி – பிரம தாண்டவம்.

## நடராசர் அபிஷேகம்

1. சித்திரை – திருவோணம் – உச்சிக்காலம்
2. ஆனி உத்திரம் – பிரதோஷ காலம்
3. ஆவணி – சுக்கிலபட்ச சதுர்த்தசி திதி – சாயரட்சை 2ம் காலம்
4. புரட்டாசி – சுக்கிலபட்ச சதுர்த்தசி திதி – அர்த்த சாமம்
5. மார்கழி – திருவாதிரை – உஷத்காலம் (விடியல்)
6. மாசி – சுக்கிலபட்ச சதுர்த்தசி திதி – காலசந்தி

## தேவாரப் பண்களும், இணையான இராகமும்

1. செவ்வழி – யதுகுல காம்போதி, 2. தக்கராகம் – காம்போதி

3. புறநீர்மை – பூபாளம், 4. பஞ்சமம் – ஆகிரி

5. நட்டபாடை – நாட்டை, 6. அந்தாளிக் குறிஞ்சி – சாமா

7. காந்தாரம் – நவரோஸ், 8. பழம்பஞ்சுரம் – சங்கராபரணம்

9. மேகராகக்குறிஞ்சி – நீலாம்பரி, 10. பழந்தக்கராகம் – ஆரபி

11. கொல்லிக்கௌவாணம் – நவரோஸ், 12. குறிஞ்சி – குறிஞ்சி

13. நட்டராகம் – பந்துவராளி, 14. வியாழக்குறிஞ்சி – சௌராஷ்ரம்

15. செந்துருத்தி – மத்யமாவதி 16. தக்கேசி – காம்போதி

17. கொல்லி – நவரோஸ் 18. இந்தளம் – நாதநாமகிரியை

19. காந்தாரபஞ்சமம் – கேதாரகௌளை, 20. கௌசிகம் – பைரவி

21. பியந்தைக்காந்தாரம் – நவரோஸ் 22. சீகாமரம்–நாதநாமகிரியை

23. சாதாரி–பந்துவராளி, 24. திருத்தாண்டகம் – அரிகாம்போதி

25. திருக்குறுந்தொகை – மாயாமாளவகௌளை

26. திருநேரிசை – அரிகாம்போதி, 27. திருவிருத்தம் – பைரவி

28. திருவிசைப்பா – ஆனந்தபைரவி

## வேதங்கள் நான்கு (தமிழ்)

1. அறம் 2. பொருள் 3. இன்பம் 4. வீடு

## நந்தியம்பெருமான் திருமணம்

நந்தியம்பெருமான்–சுயசாம்பிகை திருமணம் பங்குனி மாதம் வளர்பிறை புனர்பூசம் நட்சத்திரம். திருமழபாடியில் நடைபெறும்.

## நந்தி விலகி இருக்கும் தலங்கள்

1. திருப்புன்கூர் 2. திருப்பூந்துருத்தி 3. பட்டீஸ்வரம்

## நந்தி இறைவன் பார்க்கும் திசையை பார்க்கும் தலங்கள்

1. திருவலம் 2. வடதிருமுல்லைவாயில் 3. திருவோத்தூர்
4. பெண்ணாகடம் 5. திருவைகாவூர்

## நந்தி நின்ற திருக்கோலம்

திருமாற்பேறு

## நந்திக்கு கொம்பு ஒடிந்த தலம்

திருவெண்பாக்கம்

## நந்தி இறைவனுக்குப் பின்னும் உள்ள தலம்

திருக்குறுக்கை வீரட்டம்

## நந்தியின் வாயிலிருந்து எப்போதும் நீர் விழும் தலம்

திருவூறல் (தக்கோலம்)

## நந்தியின் உடல் துளைக்கப்பட்டுள்ள தலம்

திருவெண்காடு

## பஞ்ச மூர்த்திகள்

1. விநாயகர் 2. முருகர் 3. சிவன் 4. உமா 5. சண்டிகேசுவரர்

## பஞ்சபுராணம்

1. தேவாரம் 2. திருவாசகம் 3. திருவிசைப்பா
4. திருப்பல்லாண்டு 5. பெரியபுராணம்

# 7. திருமுறை தொகுப்பு

## தொகுப்பு 1

## குரு வணக்கம்

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே.

## கொடிக்கவி

அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் – நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.

## நால்வர் துதி

சைவத்தின் மேல் சமயம் வேறில்லை அதில்சார் சிவமாம்
தெய்வத்தின்மேல் தெய்வம்இல்லெனும் நான்மறைச் செம்பொருள்
வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றாள் எம்உயிர்த்துணையே

## சமய குரவர் துதி

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி!
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்த பிரான் அடிபோற்றி!
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி!
ஊழிமலி திருவாத வூரர் திருத்தாள் போற்றி!

## விநாயகர் வணக்கம்

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம் பிறைபோலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன்– கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே! நீயெனக்கு
சங்கத் தமிழ் மூன்றுந் தா

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்– உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

## முருகர் துதி

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் – பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

அஞ்சு முகம்தோன்றில் ஆறு முகம்தோன்றும்
வெஞ்ச மரில்அஞ்சல்என் வேல்தோன்றும் – நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன்.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.

## திருப்புகழ்

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர ...... எனவோதும்
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் ...... அடிபேணப்
பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில் ...... இரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பட்சத்தொடு ரட்சித் தருள்வதும் ...... ஒருநாளே
தித்தித்தெய ஒத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு ...... கழுதாடத்
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக ...... எனவோதக்
கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென ...... முதுகூகை
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட ஒத்துப் பொரவல ...... பெருமாளே.

## பாடல் மெட்டு

தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன ...... தனதான

## உமையம்மை துதி

உதிக்கின்ற செங்கதிர் உச்சித்திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்கமலை
துதிக்கின்ற மின் கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்தன் விழுத்துணையே
தனம் தரும் கல்வி தரும் ஒரு நாளும் தளர்வு அறியா
மனம் தரும் தெய்வ வடிவும் தரும் நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே

# அபிராமி அந்தாதி

கலையாத கல்வியும் குறையாத வயதும் ஓர்
கபடு வாராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணியிலாத உடலும்
சலியாத மனமும் அன்பகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலுமொரு
துன்பமில்லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி
அருள்வாமி! அபிராமியே!

# திருமுறை 1

## தலம்: திருவண்ணாமலை

பண்: நட்டபாடை தாளம்:

**உண்ணாமுலை உமையாளொடும் உடன் ஆகிய ஒருவன்,**
**பெண் ஆகிய பெருமான், மலை திரு மா மணி திகழ,**
**மண் ஆர்ந்தன அருவித்திரள் மழலை முழவு அதிரும்**
**அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வணம் அறுமே.**

**பொழிப்புரை**:உண்ணாமுலை என்னும் திருப்பெயருடைய உமையம்மையாரோடு உடனாக எழுந்தருளியவரும், தம் இடப்பாகம் முழுவதும் பெண்ணாகிய வருமாகிய சிவபிரானது மலை, அடித்து வரும் அழகிய மணிகள் சுடர்விட மண்ணை நோக்கி வருவனவாகிய அருவிகள் பொருள் புரியாத மழலை ஒலியோடு கூடிய முழவு போல ஒலிக்கும் திருவண்ணாமலை யாகும். அதனைத் தொழுவார் வினைகள் தவறாது கெடும். முழவு– இசைக்கருவி

# திருமுறை 2

## தலம்: திருமயிலாப்பூர்

பண்: சீகாமரம் தாளம்:

**மட்டிட்ட புன்னையம் கானல் மடமயிலைக்**
**கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்**
**ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்**
**கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.**

பொழிப்புரை: பூம்பாவாய்! தேன்பொருந்திய அழகிய. புன்னை மரச் சோலைகள் சூழ்ந்ததும், இளமயில்கள் ஆரவாரிப்பதுமான ஊரில் உள்ள கபாலீச்சரம் என்னும் கோயிலில் விருப்பத்தோடு அமர்ந்தவன் மீது நெருக்கமான அன்புடைய மாகேசுரர்களுக்குத் திருவிழாக்காலங்களில் அன்பர்கள் அமுது செய்விக்கும் காட்சிகளைக் காணாது செல்வது முறையோ? மட்டு–கள், உருத்திர பல்கணத்தார் – உருத்திராக்கம் அணிந்த சிவனடியார்கள்.

# திருமுறை 3

## தலம்: பொது

பண்: காந்தார பஞ்சமம்

**துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்**
**நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்**
**வஞ்சகம் அற்றுஅடி வாழ்த்த வந்தகூற்று**
**அஞ்ச உதைத்தன அஞ்செ ழுத்துமே.**

பொழிப்புரை: தூங்கும்பொழுதும், விழித்திருக்கும் பொழுதும், மனம் கசிந்து உருக நாள்தோறும் திருஐந்தெழுத்தை நினைத்துப் பற்றுங்கள். பல வழிகளில் திரிந்து செல்லும் தன்மையுடைய மனத்தை அவ்வாறு செல்லவிடாமல் தடுத்து ஒருமுகப்படுத்தி இறைவனையே நினைத்து அவன் திருவடிகளை வாழ்த்திப் போற்றிய மார்க்கண்டேயரின் உயிரை அவருக்கு விதிக்கப்பட்ட வாழ்நாள் இறுதியில் கவர வந்த கூற்றுவனை உதைத்துஅழித்தன திருவைந்தெழுத்தே.

# திருமுறை 4

## தலம் : திருவையாறு

பண்: காந்தாரம் தாளம்:

**மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும் பாடி,**
**போதொடு நீர் சுமந்து ஏத்திப் புகுவார் அவர் பின் புகுவேன்,**
**யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்ற போது,**
**காதல் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன்.**
**கண்டேன், அவர் திருப்பாதம்; கண்டு அறியாதன கண்டேன்.**

பொழிப்புரை: விரும்பத்தக்க பிறையை முடிமாலையாகச் சூடிய பெருமானைப் பார்வதியோடும் இணைத்துப் பாடியவர்களாய் அருச்சிக்கும் பூவும்(போது) அபிடேக நீரும் தலையில் தாங்கித் திருக்கோயிலை நோக்கிப் பெருமானைத் துதித்த வண்ணம் புகும் அடியவர்பின் சென்ற அடியேன். கயிலை மலைக்குச் சென்றபோது ஏற்பட்ட உறுப்பழிவின் சுவடு ஏதும் தோன்றாதவகையில் தீங்கு நீங்கிய யாக்கை கொண்டு, கயிலை மலையிலிருந்து கால்சுவடு படாமல் திருவையாற்றை அடைகின்ற பொழுதில், விருப்பத்திற்கு உரிய இளைய பெண்யானையோடு ஆண்யானை சேர்ந்து இரண்டுமாக வருவனவற்றைக் கண்டு, அவற்றை அடியேன் சத்தியும் சிவமுமாகக் கண்டதனால் திருப்பாதம், சிவானந்தம் ஆகிய முன் கண்டறியாதனவற்றைக் கண்டவனாயினேன்.

# திருமுறை 5

## தலம் : பொது

தனித் திருக்குறுந்தொகை

**விறகில் தீயினன் பாலில்படு நெய்போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**
**உறவு கோல்நட்டு உணர்வுக் கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே**

பொழிப்புரை: விறகில் தீப்போலவும், பாலிற்பொருந்திய நெய்போலவும், மாமணிச் சோதியானாகிய இறைவன் மறைய நின்றுளன்; உறவு என்னுங்கோலை நட்டு உணர்வு என்ற கயிற்றினால் முறுகவாங்கிக் கடைந்தால் முன்னின்று அருள் வழங்குவான்.

# திருமுறை 6

## தலம் : திருப்புள்ளுருக்குவேளூர்

பண்: திருத்தாண்டகம்

**பேர் ஆயிரம் பரவி வானோர் ஏத்தும்**
**பெம்மானை, பிரிவுஇலா அடியார்க்கு என்றும்**
**வாராத செல்வம் வருவிப்பானை,**
**மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித்**
**தீரா நோய் தீர்த்து அருள வல்லான் தன்னை,**
**திரிபுரங்கள் தீ எழத் திண் சிலை கைக் கொண்ட**
**போரானை, புள்ளிருக்கு வேளூரானை,**
**போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே!.**

பொழிப்புரை: ஆயிரம் திருநாமங்களை முன்னின்று உச்சரித்துத் தேவர்கள் துதிக்கும் பெருமானாய்த் தன்னை விடுத்து நீங்காத அடியவர்களுக்கும் என்றும் பிறப்பெடுக்கவாராத வீடுபேற்றுச் செல்வத்தை வழங்குபவனாய், மந்திரமும் அவற்றைச் செயற்படுத்தும்முறைகளும் மருந்துமாகித் தீராத நோய்களைப் போக்கியருள வல்லானாய், திரிபுரங்கள் தீப்பற்றிச் சாம்பலாகுமாறு திண்ணிய வில்லைக் கைக்கொண்டு போரிடுதலில் ஈடுபட்டவனான புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே.

# திருமுறை 7

## தலம் : திருநொடித்தான்மலை

பண்: பஞ்சமம்

தானெனை முன் படைத்தான் அது அறிந்து தன் பொன்னடிக்கே
நான் என பாடல் அந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர் கொள்ள மத்த யானை அருள்புரிந்து
ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான் மலை உத்தமனே!

பொழிப்புரை: திருக்கயிலை மலைக்கண் வீற்றிருந்தருளும் முதல்வன் , தானே முன்பு என்னை நிலவுலகில் தோற்றுவித் தருளினான் ; தோற்றுவித்த அத்திருக் குறிப்பினையுணர்ந்து அவனது பொன்போலும் திருவடிகளுக்கு , அந்தோ , நான் எவ்வளவில் பாடல்கள் செய்தேன் ! செய்யாதொழியவும் , அப்புன்மை நோக்கி ஒழியாது , என்னை அடியவர்களுள் ஒருவனாக வைத்தெண்ணி , வானவர்களும்

வந்து எதிர்கொள்ளுமாறு , பெரியதோர் யானை யூர்தியை எனக்கு அளித்து , எனது உடலொடு உயிரை உயர்வுபெறச் செய்தான் ; அவனது திருவருள் இருந்தவாறு என் !

# திருமுறை 8

## பதிகம் : அருட்பத்து

சோதியே சுடரே சூழொளி விளக்கே
  சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
  பங்கயத் தயனும்மால் அறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
  நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
  அதெந்துவே என்றரு ளாயே.

**பொழிப்புரை:** சோதியே – சோதிப் பிழம்பானவனே, சுடரே – ஒளிப்பிழம்பில் உள்ள கதிர்களாய் உள்ளவனே, சூழ் ஒளி விளக்கே – சூழ்ந்து ஒளியையுடைய விளக்குப் போன்றவனே, சுரிகுழல் – சுருண்ட கூந்தலையும், பணைமுலை – பருத்த தனங்களையும் உடைய, மடந்தை – உமாதேவியின், பாதியே – பாகத்தை உடையவனே, பரனே – மேலானவனே, பால் கொள் – பாலினது நிறத்தைக் கொண்ட, வெள் நீற்றாய் – திரு வெண்ணீற்றை யணிந்தவனே, பங்கயத்து அயனும் – தாமரை மலரை இடமாகவுடைய பிரமனும், மாலும் – திருமாலும், அறியா – அறிய முடியாத, நீதியே – நீதியானவனே, செல்வத் திருப்பெருந்துறையில் – செல்வம் மிக்க திருப்பெருந்துறையில், நிறைமலர் – நிறைந்த மலர்களையுடைய, குருந்தம் மேவிய – குருந்த மரநிழலில் பொருந்திய, சீர் ஆதியே – சிறப்புடைய முன்னவனே, அடியேன் – அடியேனாகிய நான், ஆதரித்து அழைத்தால் – உன்னை விரும்பி அழைத்தால், அதெந்துவே என்று அருளாய் – அதென்ன என்று சொல்லி அருள் புரிவாயாக.

# திருமுறை 9

## திருவிசைப்பா

தலம்: கோயில் பண்: பஞ்சமம்  தாளம்:

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
  கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
  மதிப்பவர் மனமணி விளக்கைச்

செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.

**பொழிப்புரை** : கற்றவர்களால் அக்கல்வியின் பயனாக அடைந்து அநுபவிக்கப்படும் தெய்வீக மரத்தில் பழுத்தகனி போன்றவனாய், எல்லை இல்லாத பெருங் கருணைக் கடலாய், மற்றவர்கள்தம் முயற்சி யில் அறியமுடியாத செந்நிற மாணிக்கமணியால் ஆகிய மலைபோன்றவனாய், தன்னை வழிபடும் அடியவருடைய உள்ளத்தில் மாணிக்கச் சுடர் போன்ற ஞான ஒளி வீசுபவனாய், பகைவர்களுடைய முப்புரங்களையும் அழித்த, எங்களுக்கு நன்மையைத் தருபவனாய், அடியார்களுக்கு அருளுவதற்காகவே திருவீழிமிழலையில் வீற்றிருந்த வெற்றியனாகிய சிவபெருமானைப் பலகாலும் தரிசித்ததனால் என் உள்ளம் குளிர என் கண்களும் குளிர்ச்சி பெற்றன.

## திருப்பல்லாண்டு

தலம்: கோயில் பண்: பஞ்சமம் தாளம்:

**மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள் வஞ்சகர் போயகலப்**
**பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து புவனியெல் லாம்விளங்க**
**அன்ன நடைமட வாள்உமை கோன்அடி யோமுக் கருள்புரிந்து**
**பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே**

**பொழிப்புரை**: தில்லைத்திருநகரம் என்றும் நிலைபெறுக; நம் அடியார்கள் பல்லாண்டு வாழ்க; அடிமை செய்ய ஒருப்படாதவர்கள் இல்லாதொழிய, பொன்மயமான மண்டபத்திலே நுழைந்து உலக மெல்லாம் நிலைபெறுமாறு நின்று, அன்னம் போன்ற நடையினை உடைய இளையள் ஆகிய உமாதேவியின் தலைவன், அடியவர் களாகிய நமக்கு அருள் பாலித்து மேல்வரும் பிறவியை நாம் அறுத்துக் கொள்ளும்படி அடியேமுக்குத் தன் திருக்கூத்தாகிய அருளைப் பொழிந்து திருவடி ஞானத்தை அருளியுள்ளான். அந்தப்பித்தனை நாம் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துவோமாக.

## திருமுறை 10
## பதிகம் : திருமந்திரம்

சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனொடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை
புவனம் கடந்து அன்று பொன் ஒளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரை யானே.

பொழிப்புரை: சிவனுடன் ஒப்பான ஒரு தெய்வத்தை ஆண்டுத் தேடினும் காண்டல் இல்லை. அவனுடன் ஒப்பாரை ஈண்டுங் காண்டல் இல்லை. எனவே, யாண்டும் யாவரும் அவனுக்குத் தாழ்ந்தவரே. அனைத்துலகங்களுக்கு அப்பாற்பட்டுப் பொன்போல் விளங்காநின்ற பின்னுதலையுடை தீவண்ணச் செஞ்சடையுடன் திகழ்கின்றான். மெய்யன்பர்களின் அன்பால் விளங்கும் நெஞ்சத் தாமரையைத் துய்ய வைப்பாகக் கொண்டு உறைகின்றனன் சிவன்.

# திருமுறை 11

## பதிகம் *:* அற்புதத்திருவந்தாதி

பண்: தாளம்:

**கண்ணாரக் கண்டுமென் கையாரக் கூப்பியும்**
**எண்ணார எண்ணத்தால் எண்ணியும் – விண்ணோன்**
**எரியாடி என்றென்றும் இன்புறுவன் கொல்லோ**
**பெரியானைக் காணப் பெறின்.**

# திருமுறை 12

## பதிகம் *:* பெரியபுராணம்

**வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.**

**பொழிப்புரை**: வேதத்தின் நெறிகள் தழைத்து ஓங்கவும்; அவற்றுள்ளே மிக்க சைவத் துறைகள் விளங்கவும்; பூதங்களின் தொடர் வழிவழி பொலிவுறவும்; தூய திருவாய் மலர்ந்து அழுதவராகிய; சீத**.......**திருஞானசம்பந்தர் – குளிர்ந்த வளமுடைய வயல்களாற் சூழப்பட்ட புகலி என்னும் சீகாழித் திருத்தலத்தில் அவதரித்த திருஞானசம்பந்த நாயனாருடைய; இரண்டு திருவடிகளாகிய மலர்களையும் தலையிலே சூட்டிக்கொண்டு அத்துணையாலே, அவர் செய்த திருத்தொண்டினது திறங்களைப் போற்றப் புகுவோம்.

# தொகுப்பு 2

## திருமுறை 1

தலம்: கோயில் பண்: குறிஞ்சி தாளம்:

**கற்றாங்கு எரி ஓம்பி, கலியை வாராமே**
**செற்றார் வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய**
**முற்றா வெண் திங்கள் முதல்வன் பாதமே**
**பற்றா நின்றாரைப் பற்றா, பாவமே.**

**பொழிப்புரை**: வேதம் முதலிய நூல்களைக் கற்று அவற்றின்கண் ஓதிய நெறியிலே நின்று, வேள்விகளைச் செய்து, இவ்வுலகில் வறுமையை வாராமல் ஒழிக்கும் அந்தணர்கள் வாழும் தில்லையிலுள்ள சிற்றம் பலத்தில் எழுந்தருளியவனும் இளமையான வெள்ளிய பிறை மதியைச் சூடியவனும் ஆகிய முதல்வனது திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்பவர்களைப் பாவம் பற்றா.

## திருமுறை 2

### பதிகம் : திருச்சாய்க்காடு

பண்: இந்தளம் தாளம்:

**நித்தலும் நியமம் செய்து, நீர்மலர் தூவி,**
**சித்தம் ஒன்ற வல்லார்க்கு அருளும் சிவன் கோயில்**
**மத்தயானையின் கோடும் வண் பீலியும் வாரி,**
**தத்து நீர்ப் பொன்னி, சாகரம் மேவு சாய்க்காடே.**

**பொழிப்புரை**: நாள்தோறும் நியமமாக நீரையும் மலரையும் தூவி மனம் ஒன்றி வழிபடுவார்க்கு அருள்புரியும் சிவபிரான் உறையும் கோயில், மதயானைகளின் தந்தங்களையும், மயிலினது வளமான பீலிகளையும் வாரித்தவழ்ந்துவரும் நீரினை உடைய காவிரியாறு கடலிடைக் கலக்கும் இடத்தேமைந்துள்ள திருச்சாய்க்காடு ஆகும்.

## திருமுறை 3

### பதிகம் : திருக்கழுமலம்

பண்: கொல்லி தாளம்:

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே.

**பொழிப்புரை:** உயிர்கள் இப்பூவுலகில் வளமோடு இன்பவாழ்வு வாழலாம். தினந்தோறும் இறைவனை நினைத்து வழிபட யாதொரு குறையுமிலாத முக்தியின்பமும் பெறலாம். இத்தகைய பேற்றினை அளிக்கும் பொருட்டே கண்ணுக்கினிய நல்ல வளத்தையுடைய கழுமலம் என்னும் ஊரில் பெண்ணின் நல்லாளாகிய உமாதேவியோடு பெருந்தகையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான்.

# திருமுறை 4

## தலம் : பொது

பண்: தனித்திருநேரிசை தாளம்:

**விளக்கினால் பெற்ற இன்பம் மெழுக்கினால் பதிற்றி ஆகும்;**
**துளக்கு இல் நல் மலர் தொடுத்தால்—தூய விண் ஏறல் ஆகும்;**
**விளக்கு இட்டார் பேறு, சொல்லின், மெய்ஞ்ஞெறி ஞானம் ஆகும்;**
**அளப்பு இல கீதம் சொன்னார்க்கு அடிகள் தாம் அருளும் ஆறே!**

**பொழிப்புரை:** திருக்கோயிலைப் பெருக்குவதனால் பெறும் இன்பத்தைப் போல அதனை மெழுகுவதனால் பத்து மடங்கு இன்பம் ஏற்படும். ஒளியை உடைய நல்ல மலர்களைப் பறித்து அவற்றை மாலையாகத் தொடுத்து இறைவனுக்கு ஒப்படைத்தால், தூய வீட்டுலகத்துக்கு இவ்வான்மா மேல் நோக்கிச் செல்லும். கோயிலில் விளக்கு ஏற்றுபவர்கள் உண்மை வழியில் செலுத்தும் ஞானமாகிய பேறு பெறுவர். எல்லையில்லாத பாடல்களைப் பாடுபவர்களுக்கு இறைவன் அருளும் வகைகள் எல்லை இல்லாதன.

# திருமுறை 5

## தலம் : பொது

பண்: தனித் திருக்குறுந்தொகை தாளம்:

**வாழ்த்த வாயும், நினைக்க மட நெஞ்சும்,**
**தாழ்த்தச் சென்னியும், தந்த தலைவனைச்**
**சூழ்த்த மா மலர் தூவித் துதியாதே**
**வீழ்த்தவா, வினையேன் நெடுங் காலமே!**

**பொழிப்புரை:** தன்னை வாழ்த்துதற்கு வாயும், தன்னை நினைக்க அறிவற்ற நெஞ்சும், தன்னை வணங்கத் தலையும் தந்த தலைவனாகிய பெருமானை

வண்டுகள் சூழ்ந்த மலர்களைத் தூவித்துதிக்காமல், வினையேன் நெடுங்காலம் வீழ்த்தியவாறு என்னே ?

## திருமுறை 6

## தலம் : பொது

பண்: தனித்திருத்தாண்டகம்

திருக்கோயில் இல்லாத திரு இல் ஊரும்,
திரு வெண் நீறு அணியாத திரு இல் ஊரும்,
பருக்கு ஓடிப் பத்திமையால் பாடா ஊரும்,
பாங்கினொடு பல தளிகள் இல்லா ஊரும்,
விருப்போடு வெண் சங்கம் ஊதா ஊரும்,
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்,
அருப்போடு மலர் பறித்து இட்டு உண்ணா ஊரும்,
அவை எல்லாம் ஊர் அல்ல; அடவி– காடே !.

திருநாமம் அஞ்சு எழுத்தும் செப்பார் ஆகில்,
தீ வண்ணர் திறம் ஒரு கால் பேசார் ஆகில்,
ஒருகாலும் திருக்கோயில் சூழார் ஆகில்,
உண்பதன் முன் மலர் பறித்து இட்டு உண்ணார் ஆகில்,
அருநோய்கள் கெட வெண்நீறு அணியார் ஆகில்,
அளி அற்றார்; பிறந்த ஆறு ஏதோ என்னில்,
பெரு நோய்கள் மிக நலிய, பெயர்த்தும் செத்தும்
பிறப்பதற்கே தொழில் ஆகி, இறக்கின்றாரே !.

## திருமுறை 7

## தலம் : திருப்பாண்டிக்கொடுமுடி

பண்: பழம்பஞ்சுரம் தாளம்:

தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்;
திரு நீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்;
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்;
இளையான் தன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்;
வெல்லுமா மிக வல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்;
விரி பொழில் சூழ் குன்றையார் விறல் மிண்டற்கு அடியேன்;
அல்லி மென் முல்லை அம்தார் அமர் நீதிக்கு அடியேன்;
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்;
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்;
சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்க்கும் அடியேன்;
திரு ஆரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்;
முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்;
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்;
அப்பாலும் அடிச் சார்ந்த அடியார்க்கும் அடியேன்;
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

## திருமுறை 8
## தலம் : திருவெம்பாவை

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்என் னேஎன்னே
ஈதேஎந் தோழி பரிசேலோர் எம்பாவாய்.

**பொழிப்புரை**: வாள் தடங்கண் மாதே – ஒளி பொருந்திய நீண்ட கண்களையுடைய பெண்ணே, ஆதியும் அந்தமும் இல்லா – முதலும் முடிவும் இல்லாத, அரும்பெருஞ்சோதியை – அரிய பெரிய சோதிப்பிழம்பான இறைவனை, யாம் பாடக் கேட்டேயும் – நாங்கள் பாடுவதைக் கேட்டும், வளருதியோ – உறங்குகின்றனையோ ? நின் செவி – உன் காது, வன்செவியோ – ஓசை புகாத வலிய காதோ, மாதேவன் – மகாதேவனுடைய, வார்கழல்கள் – நெடிய சிலம்பணிந்த திருவடிகளை, வாழ்த்திய வாழ்த்து ஒலி போய் – நாங்கள் புகுந்து பாடிய வாழ்த்துப் பாடல்களின் அளவிலேயே, எம் தோழி – எங்கள் தோழி ஒருத்தி, விம்மி விம்மி – பொருமி அழுது, மெய் மறந்து – உடம்பை மறந்து, போது ஆர் – மலர் நிறைந்த, அமளியின் மேனின்றும் – படுக்கையின் மீதிருந்து, புரண்டு – புரண்டு விழுந்து, இங்ஙன் – இந்நிலத்தே, ஏதேனும் ஆகாள் கிடந்தாள் – ஒன்றுக்கும் ஆகாதவள் போல மூர்ச்சித்துக் கிடந்தாள், ஈதே பரிசு – இஃது அவள் தன்மை, என்னே என்னே – என்ன வியப்பு!

# திருமுறை 9
## திருவிசைப்பா

அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டே ?
    அன்பொடு தன்னை அஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளம்அள் ளூறும்
    தொண்டருக் கெண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும், பைம்பொன்மா ளிகையும்,
    பவளவா யவர்பணை முலையும்,
கற்பகப் பொழிலும் முழுதுமாங் கங்கை
    கொண்டசோ ளேச்சரத் தானே .

**பொழிப்புரை***:* அன்போடு இறைவனாகிய தன்னை திருவைந் தெழுத்தின் சொற்களாகிய நிலையில் வைத்து உள்ளம் உருகுகின்ற உன் அடியார்களுக்கு எட்டுத் திசைகளிலும் உள்ள மலைகள் போன்ற பொன் குவியலும், அழகிய பொன்மயமான பேரில்லங்களும், பவளம் போன்ற சிவந்த வாயினையுடைய மகளிரின் பருத்த தனங்களும், கற்பகச் சோலையும் ஆகிய எல்லா நுகர் பொருள் இன்பங்களும் தானே வழங்கும் கங்கைகொண்ட சோளேச்சரத் தானைத் தவிர மேம்பட்ட தெய்வம் வேறு உளதோ ?

## திருப்பல்லாண்டு

தலம்: கோயில் பண்: பஞ்சமம் தாளம்:

தாதையைத் தாளற வீசிய சண்டிக்குஇவ் அண்டத்தொடு முடனே
பூதலத் தோரும் வணங்கப்பொற் கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும் நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

பொழிப்புரை: தம் தந்தையின் கால்கள் நீங்கும்படி மழு வாயுதத்தை வீசிய சண்டேசுர நாயனாருக்கு அந்தவானுலகத் தோடு நிலஉலகத்தவரும் ஒருசேர வணங்குமாறு அழகிய இருப்பிடமும் தனக்கு நிவேதித்த உணவும் வழங்கி, ஒளி பொருந்திய அழகிய முடியில் அணிந்த தன் மாலையும் சண்டன் என்ற சிறப்புப் பெயரும், அடியவர்களுக்குத் தலைமையும், தாம் செய்த பாதகச் செயலுக்குப் பரிசாக வழங்கிய எம்பெருமான் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துவோமாக.

# திருமுறை 10
## திருமந்திரம்

**ஒன்றவன் றானே இரண்டவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து**
**வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்**
**சென்றனன் தான்இருந் தான்உணர்ந் தெட்டே.**

**பொழிப்புரை:** ஒருபொருளாய் உள்ளவன் முதற்கடவுளே; வேறில்லை. அவனது அருள், 'அறக்கருணை, மறக்கருணை' என இரண்டாய் இருக்கும். அவ் அருள்காரணமாக அவன், 'இலயம், போகம், அதிகாரம்' என்னும் மூன்று நிலைகளில் நிற்பான். நின்று, 'அறம், பொருள், இன்பம், வீடு' என்னும் உறுதிப் பொருள் நான் கனையும் தானே உணர்ந்து உலகிற்கு உணர்த்தினான். செவிமுதலிய ஐம்பொறிகளின் வழி நுகரப்படும் ஓசை முதலிய ஐம்புலன்களின் மேல் எழுகின்ற ஐந்து அவாவினையும் வென்றான். 'மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை' என்னும் ஆறு அத்துவாக்களாக விரிந்தான். 'பிரம லோகம், விட்டு ணுலோகம், உருத்திர லோகம், மகேசுர லோகம், சதாசிவ லோகம், சத்தி லோகம், சிவ லோகம்' என்னும் ஏழுலகங்களுக்கும் மேற்சென்று தானேயாய் இருந்தான். அவனை, நெஞ்சே, நீ அறிந்து அடை.

# திருமுறை 11

## பதிகம் : அற்புதத்திருவந்தாதி

பண்: தாளம்:

**மற்றுப் பலிபிதற்ற வேண்டா மடநெஞ்சே**
**கற்றைச் சடையண்ணல் காளத்தி – நெற்றிக்கண்**
**ஆரா அமுதின் திருநாமம் அஞ்செழுத்தும்**
**சோராமல் எப்பொழுதுஞ் சொல்.**

# திருமுறை 12

## பதிகம் : பெரியபுராணம்

**மண்ணினில் பிறந்தார் பெறும் பயன் மதி சூடும்**
**அண்ணலா ரடியார்தமை யமுது செய்வித்தல்**
**கண்ணினா லவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்**
**உண்மை யாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார்.**

**பொழிப்புரை**: இம்மண்ணுலகத்தில் வினைக்கு ஈடாக வந்து பிறந்த உயிர்கள், பெறும் பிறவிப் பயனாகிய உறுதிப் பொருள்களா வன, பிறையை அணியும் பெருமானின் அடியவர் தமக்குத் திரு வமுது செய்வித்தலும், கண்களால் அவ்வடியவர்களின் உள்ளத்து உயிர்க்கு உயிராய் நிற்கும் இறைவரின் திருவிழாக்களின் பெரும் பொலிவைக் கண்டு மகிழ்தலும் ஆய இவ்விரண்டுமே என்பது உண்மையானால், பூம்பாவையே! இவ்வுலகத்தார் முன் உடலும் உயிரும் பொருந்த வருவாயாக! எனச் சூள் செய்து எடுத்துச் சொல்பவராய்,

# தொகுப்பு 3
# திருமுறை 1
## தலம் : திருநெடுங்களம்

பண்: பழந்தக்கராகம்

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்
குறையுடையார் குற்றமோராய் கொள்கையினா லுயர்ந்த
நிறையுடையா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே.

**பொழிப்புரை** : திருநெடுங்களம் மேவிய இறைவனே, வேதங்களைத் தனக்கு உடைமையாகக் கொண்டவனே, தோல் ஆடை உடுத்தவனே, நீண்ட சடை மேல் வளரும் இளம் பிறையைச் சூடியவனே, தலைக்கோலம் உடையவனே, என்று உன்னை வாழ்த்தினாலல்லது குறை உடையவர்களின் குற்றங்களை மனத்துக் கொள்ளாத நீ, மனத்தினால் உன்னையன்றி வேறு தெய்வத்தை நினையாத கொள்கையில் மேம்பட்ட நிறையுடைய அடியவர்களின் இடர்களை நீக்கி அருள் வாயாக.

# திருமுறை 2
## தலம் : திருவலஞ்சுழி

பண்: நட்டராகம்

என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே.

**பொழிப்புரை**: முழுமையான மணிகளும், முத்துக்களும் நிறைந்த நிலையான காவிரியாறு சூழ்ந்த திருவலஞ்சுழி இறைவனைப் போற்றியும், அன்பு செய்தும், பாடியும் வழிபடும் வாய்ப்புக் கிடைத்திருத் தலால், கடல் சூழ்ந்த இவ்வுலகத்து நாம் செய்த நல்வினைப் பயன்களில், நெஞ்சே ! நீ ! எத்தகைய புண்ணியத்தைச் செய்துள்ளாய் ?

# திருமுறை 3
## தலம் : திருஆலவாய்

பண்: புற நீர்மை

**மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி**
**பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவப்**
**பொங்கழ லுருவன் பூதநா யகன்நால் வேதமும் பொருள்களும் அருளி**
**அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த ஆலவா யாவது மிதுவே.**

**பொழிப்புரை**: மங்கையர்க்கரசியார் சோழ மன்னரின் புதல்வி. கைகளில் வரிகளையுடைய வளையல்களை அணிந்தவர். பெண்மைக்குரிய மடம் என்னும் பண்புக்குரிய பெருமையுடையவர். தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளுக்கு ஒப்பானவர். பாண்டிய மன்னனின் பட்டத்தரசி. சிவத்தொண்டு செய்து நாள்தோறும் சிவபெருமானைப் போற்றி வழிபடும் தன்மையுடையவர். அச்சிவபெருமான் ஓங்கி எரியும் நெருப்புப் போன்று சிவந்த வண்ணமுடைய தூய உருவினர். உயிர்கட்கெல்லாம் தலைவர். நான்கு வேதங்களையும், அவற்றின் பொருள்களையும் அருளிச் செய்தவர். அப்பெருமான் அங்கயற் கண்ணி உடனாக வீற்றிருந்தருளும் திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவே யாகும்.

# திருமுறை 4
## திருபாதிரிப்புலியூர்

பண்: திருவிருத்தம் – பைரவி

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கை செஞ்சடைமேல்வைத்த தீவண்ணனே.

**பொழிப்புரை**: இவ்வுலகிலே அடியவர்களுக்கு இரக்கப்பட்டு அருள் செய்கின்ற, திருப்பாதிரிப் புலியூரில் உறையும், செழுமையான கங்கைநீரைச் செஞ்சடையில் தேக்கி வைத்திருக்கும் தீப்போன்ற செந்நிறத்துப் பெருமானே ! அடியேன் மறுபிறவியில் புழுவாகப் பிறந்தாலும் புண்ணியமே வடிவெடுத்த உன் திருவடிகள் அடியேன் மனத்தை விட்டு நீங்காதிருக்குமாறு அடியேனுக்கு அருள் செய்ய வேண்டும்.

# திருமுறை 5

## தலம் : தில்லை

பண்: திருக்குறுந்தொகை

அல்ல லென்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே.

**பொழிப்புரை**: எதிர்வினையும் தீர்தற்கரிய நுகர்வினையும் மேலைவல்வினையாகிய துவந்துவங்களும் எனக்கு என்ன துன்பம் செய்யவல்லன ? தில்லைமாநகரிலே திருக்கூத்தாடியருளும் திருச்சிற்றம்பலவனார்க்கு அளவில்லாததொர் அடிமைபூண்ட எனக்கு அவ்வினைகள் ஒரு துன்பமும் செய்யவல்லன அல்ல.

# திருமுறை 6

## தலம் : திருத்தில்லை

பண்: திருத்தாண்டகம்

முற்றாத பால்மதியஞ் சூடி னானை
மூவுலகுந் தானாய முதல்வன் தன்னைச்
செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் தன்னைத்
திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலைக்
குற்றாலத் தமர்ந்துறையுங் குழகன் தன்னைக்
கூத்தாட வல்லானைக் கோனை ஞானம்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

**பொழிப்புரை**: வெள்ளிய பிறைமதியைச் சூடியவன் . மூவுலகும் தானேயாய் இருக்கும் தலைவன் . பகைவருடைய மும்மதிலையும் அழித்தவன் . விளங்கும் ஒளிவடிவினன் . இடப்பாகத்தது நிறத்தால் மரகதமணி போன்றவன் . இன்பம் பயத்தலால் தேனும் பாலும் போன்றவன் . குற்றாலம் என்ற திருத்தலத்தை உகந்தருளியிருக்கும் இளையவன் . கூத்தாடுதலில் வல்லவன் . யாவருக்கும் தலைவன் . சிவஞானியர் ஞானத்தால் அறியப் பெற்றவன் ஆகிய பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே

# திருமுறை 7

## தலம் : திருவாரூர்

பண்: தக்கேசி

**பொன் செய்த மேனியினீர்; புலித்தோலை அரைக்கு அசைத்தீர்;**
**முன் செய்த மூ எயிலும்(ம்) எரித்தீர்; முதுகுன்று அமர்ந்தீர்;**
**மின் செய்த நுண் இடையாள் பரவை இவள் தன் முகப்பே,**
**என் செய்த ஆறு, அடிகேள்! அடியேன் இட்டளம் கெடவே?**

**பொழிப்புரை**: பொன்னைப்போலும் திருமேனியை உடையவரே, புலியினது தோலை அரையில் உடுத்தவரே, நன்கு செய்யப்பட்ட மூன்று மதில்களையும் முன்பு எரித்தவரே, திருமுதுகுன்றத்தில் விரும்பி இருப்பவரே, அடிகளே, மின்னல் போலும் நுண்ணிய இடையை யுடையவளும், 'பரவை' என்னும் பெயரினளுமாகிய இவள் முன்னே, அடியேனது துன்பங் கெடுதற்கு நீவிர் என் செய்தவாறு!

# திருமுறை 8

## பதிகம் : அச்சோப்பதிகம்

**முத்தி நெறி அறியாத மூர்க்கரொடும் முயல்வேனை,**
**பத்தி நெறி அறிவித்து, பழ வினைகள் பாறும்வண்ணம்,**
**சித்த மலம் அறுவித்து, சிவம் ஆக்கி, எனை ஆண்ட**
**அத்தன் எனக்கு அருளிய ஆறு, ஆர் பெறுவார்? அச்சோவே!**

பதப்பொருள்: முத்தி நெறி அறியாத – வீடு பெறும் வழியை அறியாத, மூர்க்கரொடு முயல்வேனை – மூர்க்கரொடு சேர்ந்து அவர்வழி ஒழுகுவேனாகிய எனக்கு, பத்தி நெறி அறிவித்து – பத்தி வழியைக் காட்டி, பழவினைகள் பாறும் வண்ணம் – பழமையாகிய வினைகள் கெடும்படி, சித்தமலம் அறுவித்து – அறிவைப் பற்றியுள்ள மூல மலத்தினைப் போக்கி, சிவம் ஆக்கி – சிவமாந்தன்மையைத் தந்து, எனை ஆண்ட – என்னை ஆண்டருளின, அத்தன் – என் தந்தையாகிய இறைவன், எனக்கு அருளிய ஆறு – எனக்கு அருள் செய்த முறையை, ஆர் பெறுவார் – வேறு யார் பெற வல்லார்? அச்சோ – இஃது அதிசயம்.

# திருமுறை 9

## தலம் : திருவிசைப்பா

தலம்: திருவீழிமிழலை பண்: பஞ்சமம்

**எண்ணில்பல் கோடி சேவடி முடிகள்**
**எண்ணில்பல் கோடிதிண் டோள்கள்**
**எண்ணில்பல் கோடி திருவுரு நாமம்**
**ஏர்கொள்முக் கண்முகம் இயல்பும்**
**எண்ணில்பல் கோடி எல்லைக்கப் பாலாய்**
**நின்றைஞ்ஞூற் றந்தணர் ஏத்தும்**
**எண்ணில்பல் கோடி குணத்தர்ஏர் வீழி**
**இவர்நம்மை ஆளுடை யாரே**

**பொழிப்புரை**: எண்ணிக்கையைக் கடந்த பலகோடிக் கணக்கான சிவந்த பாதங்களையும், பலமுடிகளையும், பல வலிய தோள்களை யும், பலகோடிக்கணக்கான திருவுருவங்களையும், திருநாமங்களை யும், அழகிய முக்கண்கள் பொருந்திய முகங்களையும் செயல்களையும் கொண்டு அளவின் எல்லைக்கு அப்பாற்பட்டவராய் நின்று, அந்தணர் ஐந்நூற்றுவர் துதித்து வழிபடுகின்ற எண்ணற்ற பலகோடி நற்பண்புகளை உடையவர் அழகிய திருவீழிமிழலையை உகந்தருளியிருக்கும் பெருமானார். இவர் நம்மை அடியவராகக் கொள்ளும் இன்னருள் உடையவர்.

## திருப்பல்லாண்டு

தலம்: கோயில் பண்: பஞ்சமம்

**குழல் ஒலி யாழ்ஒலி கூத்தொலி ஏத்தொலி**
**எங்கும் குழாம்பெருகி**
**விழவொலி விண்ணள வுஞ்சென்று விம்மி**
**மிகுதிரு வாரூரின்**
**மழவிடை யாற்கு வழிவழி ஆளாய்**
**மணஞ்செய் குடிப்பிறந்த**
**பழவடி யாரொடுங் கூடிஎம் மானுக்கே**
**பல்லாண்டு கூறுதுமே**

**பொழிப்புரை**: வேய்ங்குழல்இசை, யாழின்இசை, கூத்தாடுதலின் ஓசை, துதித்தலின் ஓசை என்பன கூட்டமாகப்பெருகித் திருவிழா நாளில் நிகழ்த்தப்படும் ஓசையோடுகூடி வானத்தளவும் சென்று பெருகி மிகுகின்ற திருவாரூரில் இளைய காளையை வாகனமாக உடைய சிவபெருமானுக்குப் பரம்பரை பரம்பரையாக

அடிமையாய் அத்தகைய குடும்பங்களுக்குள்ளேயே திருமணம் செய்துகொள்கின்ற அடியவர் குடும்பங்களில் பிறந்த பழ அடியாரோடும் கூடி எம் பெருமான் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துவோமாக.

# திருமுறை 10

## திருமந்திரம்

**விண்ணின்று இழிந்து வினைக்கு ஈடாய் மெய்கொண்டு**
**தண் நின்ற தாளைத் தலைக் காவல் முன் வைத்து**
**உள் நின்று உருக்கி ஓர் ஒப்பு இலா ஆனந்தக்**
**கண் நின்று காட்டிக் களிம்பு அறுத்தானே.**

**பொழிப்புரை**: ஆருயிர்களை ஆட்கொள்ள வேண்டிய அருள்வினைக் கீடாக சிவவுலகத்தினின்றும் நிலவுலகம் போந்து சிவகுருவாய்த் தோன்றியருளினன். மிகவும் குளிர்ச்சி பொருந்திய திருவடியைத் தொன்மை நன்மைக் காவலாய் முன்னமே அமைத்தருளினன். அவனே உள் நின்று நெகிழச்செய்து ஒப்பில்லாத பேரின்பக் கண்ணாகிய அகக்கண்ணைக் காட்டியருளிப் பழமலமாகிய களிம்பினை யறுத்தருளினன். களிம்பு, என்பது பெரும்பாலும் தூய வாய பொருள்களைத் தான் சார்ந்தமையான் தீயவாக்கும் நோயாகிய பகைப்பொருள். இது நாயனாரருளிய 'பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால், கலந்தீமை யால்திரிந்தற்று.' என்னும் செந்தமிழ்ப் பொதுமறையான் உணரலாம்.

# திருமுறை 11

## பதிகம் : அற்புதத்திருவந்தாதி

பண்: தாளம்:

அறிவானுந் தானே; அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே – அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர் பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே அவன்.

**பொழிப்புரை**: இறைவன் தானே அறிவான்; அறிவிப்பானும் தானே; அறிவுக்கறிவாய் நின்று அறிகின்றானும் தானே; அறியப்படும் மெய்ப்பொருளுள்களும் தானே; சுடர் – நிலம் – ஆகாயம் முதலிய பொருள்களும் தானே.

# திருமுறை 12

## பதிகம் : பெரியபுராணம்

**திருநாவுக்கரசர் வளர் திருத் தெ ?ண்டின் நெறி வாழ**
**வரு ஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மை திகழ்**
**பெரு நாமச் சீர் பரவல் உறுகின்றேன் பேர் உலகில்**
**ஒரு நாவுக்கு உரை செய்ய ஒண்ணாமை உணராதேன்.**

**பொழிப்புரை**: திருநாவுக்கரசர் எனவும், சிவபெருமானின் திருத் தொண்டு வளர்வதற்குக் காரணமான நெறியில் நின்று உலகம் வாழும் பொருட்டு வரும் ஞானத்தவ முனிவரான வாகீசர் எனவும், வாய்மை விளங்குவதற்கு ஏதுவான பெருமையுடைய திருப்பெயரின் சிறப்பு களை, இப்பேருலகின்கண் எடுத்துக் கூறுதற்கு ஒரு நாவுக்கும் இய லாமையை உணராதவனாகிய எளியேன், போற்றத் துணிகின்றேன்.

# முழு திருமுறை பதிகம் தொகுப்பு

## தலம் : திருச்செங்கோடு

பண்: வியாழக்குறிஞ்சி

**செய்வினை, பில்லி சூனியம் மற்றும் பல வினைகளினால் வரும் துன்பங்களிலிருந்து நம்மைக் காக்கும் பதிகம்**

அவ்வினைக்கு இவ்வினை ஆம் என்று சொல்லும் அஃது அறிவீர்
உய்வினை நாடாது இருப்பதும் உந்தமக்கு ஊனம் அன்றே ?
கை–வினை செய்து எம் பிரான் கழல் போற்றுதும்; நாம் அடியோம்;
செய்–வினை வந்து எமைத் தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்!''. 1

காவினை இட்டும், குளம் பல தொட்டும், கனி–மனத்தால்,
ஏ–வினையால் எயில் மூன்று எரித்தீர் என்று இரு–பொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் ; நாம் அடியோம் ;
தீவினை வந்து எமைத் தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 2

முலைத்–தடம் மூழ்கிய போகங்களும், மற்று எவையும் எல்லாம்
விலைத்தலையாவணம் கொண்டு எமை ஆண்ட விரி–சடையீர்;
இலைத்–தலைச் சூலமும் தண்டும் மழுவும் இவை உடையீர்;
சிலைத்து எமைத் தீவினை தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 3

விண்ணுலகு ஆள்கின்ற விச்சாதரர்களும் வேதியரும்
புண்ணியர் என்று இரு–போதும் தொழப்படும் புண்ணியரே;
கண் இமையாதன மூன்று உடையீர் உம் கழல் அடைந்தோம்;
திண்ணிய தீவினை தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 4

மற்று–இணை இல்லா மலை திரண்டன்ன திண்–தோள் உடையீர்;
கிற்று எமை ஆட்கொண்டு கேளாது ஒழிவதும் தன்மை–கொல்லோ ?
சொற்றுணை வாழ்க்கை துறந்து உம் திருவடியே அடைந்தோம்;
செற்று எமைத் தீவினை தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 5

மறக்கும் மனத்தினை மாற்றி, எம் ஆவியை வற்புறுத்திப்,
பிறப்பு–இல் பெருமான் திருந்தடிக்–கீழ்ப் பிழையாத வண்ணம்
பறித்த மலர்–கொடு வந்து உமை ஏத்தும் பணி–அடியோம்,
சிறப்பு–இல்–இத் தீவினை தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 6

கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்து உம் கழல்–அடிக்கே
உருகி மலர்–கொடு வந்து உமை ஏத்துதும் நாம் அடியோம் ;
செரு–இல் அரக்கனைச் சீரில் அடர்த்து–அருள் செய்தவரே ;
திரு–இல்–இத் தீவினை தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 7

நாற்ற மலர்மிசை நான்முகன் நாரணன் வாது–செய்து
தோற்றம் உடைய அடியும் முடியும் தொடர்வு–அரியீர்;
தோற்றினும் தோற்றும் தொழுது வணங்குதும் நாம் அடியோம்;
சீற்றம்–அது–ஆம் வினை தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 8

சாக்கியப் பட்டும் சமண்–உரு ஆகி உடை ஒழிந்தும்
பாக்கியம் இன்றி இரு–தலைப் போகமும் பற்றும் விட்டார் ;
பூக்–கமழ் கொன்றைப் புரி–சடையீர், அடி போற்றுகின்றோம்;
தீக்குழித் தீவினை தீண்டப் பெறா; திரு–நீல–கண்டம்! 9

பிறந்த பிறவியில் பேணி எம் செல்வன் கழல் அடைவான்
இறந்த பிறவி உண்டு ஆகில் இமையவர்–கோன் அடிக்கண்
திறம் பயில் ஞான–சம்பந்தன செந்தமிழ் பத்தும் வல்லார்,
நிறைந்த உலகினில் வானவர்–கோனொடும் கூடுவரே. 10

திருச்சிற்றம்பலம்



# தலம் : திருமருகல்



திருமுறை : 2/18 பண் : இந்தளம் இராகம் : நாதநாமக்கிரியா

**திருமணம் விரைவில் நடைபெறவும், சர்ப்ப தோஷம் நீங்கவும்**

சடையாய் எனுமால் சரண் நீ எனுமால்
விடையாய் எனுமால் வெருவா விழுமால்
மடை ஆர் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள் உள் மெலிவே. 1

சிந்தாய் எனுமால் சிவனே எனுமால்
முந்தாய் எனுமால் முதல்வா எனுமால்
கொந்து ஆர் குவளை குலவும் மருகல்
ஏந்தாய் தகுமோ இவள் ஏசறவே. 2

அறையார் கழலும் அழல்வாய் அரவும்
பிறையார் சடையும் உடையாய் பெரிய
மறையார் மருகல் மகிழ்வாய் இவளை
இறையார் வளைகொண்டு எழில் வவ்வினையே. 3

ஒலிநீர் சடையில் கரந்தாய் உலகம்
பலி நீ திரிவாய் பழியில் புகழாய்
மலி நீர் மருகல் மகிழ்வாய் இவளை
மெலி நீர்மையள் ஆக்கவும் வேண்டினையே. 4

துணி நீலவண்ணம் முகில் தோன்றியன்ன
மணி நீலகண்டம் உடையாய் மருகல்
கணி நீலவண்டு ஆர் குழலாள் இவள்தன்
அணி நீலஒண்கண் அயர்வு ஆக்கினையே. 5

பலரும் பரவப்படுவாய் சடைமேல்
மலரும் பிறை ஒன்று உடையாய் மருகல்
புலரும்தனையும் துயிலாள் புடைபோந்து
அலரும் படுமோ அடியாள்இவளே. 6

வழுவாள் பெருமான்கழல் வாழ்க எனா
எழுவாள் நினைவாள் இரவும் பகலும்
மழுவாள் உடையாய் மருகல் பெருமான்
தொழுவாள் இவளைத் துயர் ஆக்கினையே. 7

இலங்கைக்கு இறைவன் விலங்கல் எடுப்பத்
துலங்கவ் விரல் ஊன்றலும் தோன்றலனாய்
வலம்கொள் மதில் சூழ் மருகல் பெருமான்
அலங்கல் இவளை அலர் ஆக்கினையே. 8

எரியார் சடையும் அடியும் இருவர்
தெரியாதது ஓர் தீத்திரள் ஆயவனே
மரியார் பிரியா மருகல் பெருமான்
அரியாள்இவளை அயர்வு ஆக்கினையே. 9

அறிவுஇல் சமணும் அலர்சாக்கியரும்
நெறிஅல்லன செய்தனர் நின்று உழல்வார்
மறி ஏந்து கையாய் மருகல் பெருமான்
நெறி ஆர் குழலி நிறை நீக்கினையே. 10

வயஞானம் வல்லார் மருகல் பெருமான்
உயர் ஞானம் உணர்ந்து அடிஉள்குதலால்
இயல் ஞானசம்பந்தன பாடல்வல்லார்
வியன்ஞாலம் எல்லாம் விளங்கும் புகழே. 11

திருச்சிற்றம்பலம்





# தலம் : திருஆலவாய் (மதுரை)



பண்: காந்தாரம் இரண்டாம் திருமுறை திருஞானசம்பந்தர்

**வெப்பு நோய், அம்மை, சுரம் மற்றும் எல்லா நோய்களிலிருந்தும் விடுபட திருநீறு இட்டு ஓத வேண்டிய பதிகம். திருநீற்றின் பெருமையை எடுத்துரைக்கும் பதிகம்.**

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

அருத்தம தாவது நீறு அவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே. 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மால வாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூட
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆல வாயான் திருநீறே. 10

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

# தலம் : திருவெண்காடு

திருமுறை 2/48 இராகம் : நாதநாமக்கிரியா பண் : சீகாமரம்

**மக்கட்செல்வம் வாய்க்க, வாதத்திறம் பெற, தத்துவ ஞானம் பெற ஓத வேண்டிய பதிகம்**

கண்காட்டும் நுதலானும் கனல்காட்டும் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டும் சடையானும்
பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டும் கொடியானே. 1

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ளநினைவு
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே. 2

மண்ணொடுநீர் அனல்காலோடு ஆகாயம் மதிஇரவி
எண்ணில்வரும் இயமானன் இகபரமும் எண்திசையும்
பெண்ணினொடுஆண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபட வெண்காடு இடமா விரும்பினனே. 3

விடமுண்ட மிடற்றுஅண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகுஎன்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைக்காட்டும் காட்சியதே. 4

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்தன்
மேல்அடர் வெங்காலன்உயிர் விண்டபினை நமன்தூதர்
ஆலமிடற்றான் அடியார் என்றுஅடர அஞ்சுவரே. 5

தண்மதியும் வெய்அரவும் தாங்கினான் சடையின்உடன்
ஒண்மதிய நுதல்உமையோர் கூறு உகந்தான் உறைகோயில்
பண்மொழியால் அவன்நாமம் பலஓதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே. 6

சக்கரம்மாற்கு ஈந்தானும் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமேல் அசைத்தானும் அடைந்த அயிராவதம்பணிய
மிக்கதனுக்கு அருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளம் நன்கு உடையானும் முக்கண்உடை இறைவனே. 7

பண்மொய்த்த இன்மொழியாள் பயம்எய்த மலையெடுத்த
உன்மத்தன் உரம்நெரித்து அன்று அருள்செய்தான் உறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண்டு இசைமுரலும் வெண்காடே. 8

கள்ளார் செங்கமலத்தான் கடல்கிடந்தான் என இவர்கள்
ஒள் ஆண்மை கொளற்கு ஓடி உயர்ந்து ஆழ்ந்தும் உணர்வு அரியான்
வெள்ளானை தவம்செய்யும் மேதகு வெண்காட்டான் என்று
உள் ஆடி உருகாதார் உணர்வு உடைமை உணரோமே. 9

போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருள்என்னும்
பேதையர்கள் அவர்பிரிமின் அறிவுடையீர் இதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்திருவெண்காட்டான் என்று
ஓதியவர் யாதும்ஒரு தீதிலர்என்று உணருமினே. 10

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் தமிழ் ஞானசம்பந்தன்
விண்பொலி வெண்பிறைச்சென்னி விகிர்தன்உறை வெண்காட்டைப்
பண்பொலி செந்தமிழ் மாலை பாடியபத்து இவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர் போய் வான்பொலியப் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

# தலம் : திருமறைக்காடு

பண்: பியந்தைக்காந்தாரம்

இரண்டாம் திருமுறை திருஞானசம்பந்தர்

**நவகிரகங்களால் நமக்கு உண்டாகக்கூடிய தொல்லைகளை நீக்க ஓத வேண்டிய திருப்பதிகம்.**

**வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்**
**மிகநல்ல வீணை தடவி**
**மாசறு திங்கள்கங்கை முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி**
**சனிபாம்பு இரண்டும் உடனே**
**ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே.**

**பொருள்**: இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு ஒன்பது கிரகங்களும் குற்றமற்ற நன்மையே புரியும். இடர்கள் ஏதும் புரியாது.

**என்பொடு கொம்பொடாமை இவைமார்பு இலங்க**
**எருதேறி ஏழை உடனே**
**பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**ஒன்பது ஒன்றொடுஏழு பதினெட்டொடு ஆறும்**
**உடனாய நாள்கள் அவைதாம்**
**அன்பொடு நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே.**

பொருள்: அனைத்து நட்சத்திரங்களும், நாள்களும் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு எவ்வித இடரும் புரியாது. மாறாக நன்மையே விளைவிக்கும்.

**உருவளர் பவளமேனி ஒளி நீறணிந்து**
**உமையோடும் வெள்ளை விடைமேல்**
**முருகலர் கொன்றைதிங்கள் முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**திருமகள் கலையதூர்தி செயமாது பூமி**
**திசை தெய்வமான பலவும்**
**அருநெதி நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே.**

**பொருள்**: திருமகள், துர்க்கை, அஷ்ட திக்குப் பாலகர்கள், பூமியை இயக்கும் அதி தேவதை ஆகியோர் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு நன்மையே புரிவர். குற்றமற்ற செல்வமும் வந்து எய்தும்.

**மதிநுதல் மங்கையோடு வடபால் இருந்து**
**மறையோதும் எங்கள் பரமன்**
**நதியொடு கொன்றைமாலை முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**கொதியுறு காலன்அங்கி நமனோடு தூதர்**
**கொடு நோய்களான பலவும்**
**அதிகுணம் நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே**

**பொருள்**: சினம் மிகுந்த கூற்றுவன், அக்கினி, காலனின் தூதுவர்கள் ஆகியோர் இடர் புரியாமல் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு நன்மையே புரிவர். கொடிய நோய்கள் வருத்தாது.

**நஞ்சணி கண்டன்எந்தை மடவாள் தனோடும்**
**விடையேறு நங்கள் பரமன்**
**துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**வெஞ்சின அவுணரோடு உருமிடியும் மின்னும்**
**மிகையான பூதம் அவையும்**
**அஞ்சிடு நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே**

பொருள்: கொடிய சினத்தை உடைய அரக்கர்களாலும், பஞ்ச பூதங்களாலும் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு இடர் நேராது. மாறாக நன்மையே விளையும். இல்லாமையாகிய வறுமை வந்து எய்தாது.

**வாள்வரிய தளதாடை வரி கோவணத்தர்**
**மடவாள் தனோடு உடனாய்**
**நாள்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**கோளரி உழுவையோடு கொலையானை கேழல்**
**கொடு நாகமோடு கரடி**
**ஆளரி நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே**

**பொருள்**: சிங்கம், புலி, கொல்லும் தன்மை கொண்ட யானை, பன்றி, கொடிய நாகம், கரடி ஆகியவைகளால் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு இடர் நேராது. மாறாக நன்மையே விளையும்.

**செப்பிள முலைநல்மங்கை ஒரு பாகமாக**
**விடையேறு செல்வன் அடைவார்**
**ஒப்பிள மதியும்அப்பும் முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்**
**வினையான வந்து நலியா**
**அப்படி நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே**

**பொருள்**: வெப்பம், குளிர், வாதம்; பித்தம் முதலான நாடிகள் ஆகிவைகளும் தம் இயல்பில் இருந்து நீங்காமல் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு நன்மையே விளைவிக்கும்.

**வேள்பட விழிசெய்துஅன்று விடைமேல் இருந்து**
**மடவாள் தனோடும் உடனாய்**
**வாள்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**ஏழ்கடல் சூழ்இலங்கை அரையன் தனோடும்**
**இடரான வந்து நலியா**
**ஆழ்கடல் நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே**

**பொருள்:** கயிலை மலையை பெயர்க்க முற்பட்ட இராவணனை பெரும் இடர் எய்தியது. அது போன்று இடர்கள் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு நேராது. ஆழ்கடலும் நன்மையே செய்யும்.

**பலபல வேடமாகும் பரனாரி பாகன்**
**பசுவேறும் எங்கள் பரமன்**
**சலமகளோடு எருக்கு முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**மலர்மிசையோன் மால் மறையோடு தேவர்**
**வரு காலமான பலவும்**
**அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே**

**பொருள்**: பிரமன், திருமால், மறைகள், தேவர்கள் ஆகியோர் அனைவரும் இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு நன்மையே புரிவர். மேலும் வரும் காலங்கள் ஆன பலவும், கடலும், மேரு மலையும் நன்மையே விளைவிக்கும்.

**கொத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு**
**குணமாய வேட விகிர்தன்**
**மத்தமும் மதியும் நாகம் முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்த அதனால்**
**புத்தரோடு அமணைவாதில் அழிவிக்கும் அண்ணல்**
**திருநீறு செம்மை திடமே**
**அத்தகு நல்லநல்ல அவைநல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே**

**பொருள்**: புத்தரையும் சமணரையும் வாதில் வெல்லும் நிலையான பெற்றியை உடையது சிவபெருமானின் திருநீறு. இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு எவ்வித இடரும் நேராத வண்ணம் காத்து நிற்கும் பெருமானின் திருநீறு.

**தேனமர் பொழில்கொள்ஆலை விளைசெந்நெல் துன்னி**
**வளர்செம்பொன் எங்கும் நிகழ**
**நான்முகன் ஆதியாய பிரமா புரத்து**
**மறைஞான ஞான முனிவன்**
**தானுறு கோளுநாளும் அடியாரை வந்து**
**நலியாத வண்ணம் உரைசெய்**
**ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்**
**அரசாள்வர் ஆணை நமதே!!**

பொருள்: இப்பதிகத்தை ஓதும் சிவபெருமானின் அடியவருக்கு நாள்களும், கோள்களும், நட்சத்திரங்களும் நன்மையே புரியும். இது நம் ஆணை.



## தலம் : திரு ஆவடுதுறை



திருமுறை : 3/4 பண் : காந்தாரபஞ்சமம் இராகம் : கேதார கௌளம்

**வறுமை நீங்கி பொருளாதாரம் மேம்பட ஓத வேண்டிய பதிகம்**

இடரினும் தளரினும் எனதுஉறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதுஎழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவதொன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 1

வாழினும் சாவினும் வருந்தினும் போய்
வீழினும் உன கழல் விடுவேன் அல்லேன்
தாழ் இளந் தடம்புனல் தயங்கு சென்னிப்
போழ்இளமதி வைத்த புண்ணியனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 2

நனவினும் கனவினும் நம்பா உன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்
புனல் விரிநறுங்கொன்றைப்போது அணிந்த
கனல் எரி அனல் புல்கு கையவனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 3

துமமலோடு அருந்துயர் தோன்றிடினும்
அம் மலர்அடிஅலால் அரற்றாது என் நாக்
கைம் மல்கு வரிசிலைக் கணை ஒன்றினால்
மும்மதில் எரி எழ முனிந்தவனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 4

கையது வீழினும் கழிவு உறினும்
செய் கழல் அடிஅலால் சிந்தைசெய்யேன்
கொய் அணி நறுமலர் குலாய சென்னி
மை அணி மிடறு உடை மறையவனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 5

வெந்துயர் தோன்றி ஓர் வெருஉறினும்
எந்தாய் உன் அடிஅலால் ஏத்தாது என் நா
ஐந்தலைஅரவுகொண்டு அரைக்கு அசைத்த
சந்த வெண்பொடி அணி சங்கரனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 6

வெப்பொடு விரவி ஓர் வினை வரினும்
அப்பா உன் அடிஅலால் அரற்றாது என் நா
ஒப்பு உடை ஒருவனை உருவு அழிய
அப்படி அழல் எழ விழித்தவனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 7

பேர் இடர் பெருகி ஓர் பிணி வரினும்
சீர் உடைக் கழல்அலால் சிந்தைசெய்யேன்
ஏர் உடை மணி முடி இராவணனை
ஆர் இடர் பட வரை அடர்த்தவனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 8

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும் நின்
ஒண்மலர் அடிஅலால் உரையாது என் நா
கண்ணனும் கடி கமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்புஅரிது ஆயவனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 9

பித்தொடு மயங்கி ஓர் பிணி வரினும்
அத்தா உன் அடிஅலால் அரற்றாது என் நாப்
புத்தரும் சமணரும் புறன்உரைக்கப்
பத்தர்கட்கு அருள்செய்து பயின்றவனே
இதுவோ எமை ஆளும்ஆறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள் ஆவடுதுறை அரனே. 10

அலை புனல் ஆவடுதுறை அமர்ந்த
இலை நுனை வேல்படை எம் இறையை
நலம் மிகு ஞானசம்பந்தன் சொன்ன
விலை உடை அருந்தமிழ்மாலை வல்லார்
வினைஆயின நீங்கிப்போய் விண்ணவர் வியன்உலகம்
நிலையாக முன் ஏறுவர் நிலம்மிசை நிலை இலரே. 11

திருச்சிற்றம்பலம்

# தலம் : பொது

சிறப்பு: பாசுரம் பண்: கௌசிகம்

**மூன்றாம் திருமுறை திருஞானசம்பந்தர்**

**நல்ல வேலை கிடைக்கவும், பாராட்டுக்குரிய செயல்கள் செய்யவும், புண்ணிய செயல்களில் நாட்டம் ஏற்படவும் ஓத வேண்டிய பதிகம்.**

வாழ்க அந்தணர், வானவர், ஆன் இனம்!
வீழ்க, தண்புனல்! வேந்தனும் ஓங்குக!
ஆழ்க, தீயது எல்லாம்! அரன் நாமமே
சூழ்க! வையகமும் துயர் தீர்கவே! 1

அரிய காட்சியராய், தமது அங்கை சேர்
எரியர்; ஏறு உகந்து ஏறுவர்; கண்டமும்
கரியர்; காடு உறை வாழ்க்கையர்; ஆயினும்,
பெரியர்; ஆர் அறிவார், அவர் பெற்றியே? 2

வெந்த சாம்பல் விரை எனப் பூசியே,
தந்தையாரொடு தாய் இலர்; தம்மையே
சிந்தியா எழுவார் வினை தீர்ப்பரால்;
எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ! 3

ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான் புகில், அளவு இல்லை; கிளக்க வேண்டா;
கோள்பாலனவும் வினையும் குறுகாமை, எந்தை
தாள்பால் வணங்கித் தலைநின்று இவை கேட்க, தக்கார் 4

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா; சுடர்விட்டு உளன், எங்கள் சோதி;
மா துக்கம் நீங்கல் உறுவீர், மனம்பற்றி வாழ்மின்!
சாதுக்கள் மிக்கீர், இறையே வந்து சார்மின்களே 5

ஆடும்(ம்) எனவும், அருங்கூற்றம் உதைத்து வேதம்
பாடும்(ம்) எனவும், புகழ் அல்லது, பாவம் நீங்கக்
கேடும் பிறப்பும்(ம்) அறுக்கும்(ம்) எனக் கேட்டிர் ஆகில்,
நாடும் திறத்தார்க்கு அருள் அல்லது, நாட்டல் ஆமே? 6

கடி சேர்ந்த போது மலர் ஆன கைக் கொண்டு, நல்ல
படி சேர்ந்த பால்கொண்டு, அங்கு ஆட்டிட, தாதை பண்டு
முடி சேர்ந்த காலை அற வெட்டிட, முக்கண் மூர்த்தி
அடி சேர்ந்த வண்ணம்(ம்) அறிவார் சொலக் கேட்டும் அன்றே! 7

வேதமுதல்வன் முதல் ஆக விளங்கி, வையம்
ஏதப்படாமை, உலகத்தவர் ஏத்தல் செய்ய,
பூதமுதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூதன் ஒலிமாலை என்றே கலிக்கோவை சொல்லே! 8

பார் ஆழிவட்டம் பகையால் நலிந்து ஆட்ட, வாடி
பேர் ஆழியானது இடர் கண்டு, அருள் செய்தல் பேணி,
நீர் ஆழி விட்டு ஏறி நெஞ்சு இடம் கொண்டவர்க்குப்
போர் ஆழி ஈந்த புகழும் புகழ் உற்றது அன்றே! 9

மால் ஆயவனும் மறைவல்லவன் நான்முகனும்
பால் ஆய தேவர் பகரில், அமுது ஊட்டல் பேணி,
கால் ஆய முந்நீர் கடைந்தார்க்கு அரிது ஆய் எழுந்த
ஆலாலம் உண்டு, அங்கு அமரர்க்கு அருள் செய்தது ஆமே! 10

அற்று அன்றி அம் தண் மதுரைத் தொகை ஆக்கினானும்,
தெற்று என்ற தெய்வம் தெளியார் கரைக்கு ஓலை தெண் நீர்ப்
பற்று இன்றிப் பாங்கு எதிர்வின் ஊரவும், பண்பு நோக்கில்,
பெற்றொன்று உயர்த்த பெருமான் பெருமானும் அன்றே! 11

நல்லார்கள் சேர் புகலி ஞானசம்பந்தன், நல்ல
எல்லார்களும் பரவும் ஈசனை ஏத்து பாடல்,
பல்லார்களும் மதிக்கப் பாசுரம் சொன்ன பத்தும்,
வல்லார்கள், வானோர் உலகு ஆளவும் வல்லர் அன்றே! 12

திருச்சிற்றம்பலம்

## ஆறாம் திருமுறை.

திருநாவுக்கரசர் பண்: திருத்தாண்டகம்



## தலம் : திருக்கயிலாயம்

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
உள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி

திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடு முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கு முடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி உலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி
எண்ணு மெழுத்துஞ்சொல் லானாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி

விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

இமையா துயிரா திருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
ஊழியே ழான ஒருவா போற்றி
அமையா அருநஞ்ச மார்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

நெடிய விசும்போடு கண்ணே போற்றி
நீள அகல முடையாய் போற்றி
அடியும் முடியும் இகலி போற்றி
அங்கொன் றறியாமை நின்றாய் போற்றி
கொடிய வன்கூற்ற முதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் றன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

திருச்சிற்றம்பலம்

# ஏழாம் திருமுறை. சுந்தரமூர்த்தி சுவாமிகள்

ஐந்தெழுத்து பதிகம்.பண்: பழம்பஞ்சுரம்

## தலம் : திருப்பாண்டிக்கொடுமுடி

மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப் பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேன்இ னிப்பிற வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 1

இட்ட னுன்னடி ஏத்து வார்இகழ்ந் திட்ட நாள்மறந் திட்டநாள்
கெட்ட நாள்இவை என்ற லாற்கரு தேன்கி ளர்புனற் காவிரி
வட்ட வாசிகை கொண்ட டிதொழு தேத்து பாண்டிக் கொடுமுடி
நட்ட வாஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 2

ஓவு நாள்உணர் வழியும்நாள் உயிர் போகும் நாள்உயர் பாடைமேல்
காவு நாள்இவை என்ற லாற்கரு தேன்கி ளர்புனற் காவிரிப்
பாவு தண்புனல் வந்தி ழிபரஞ் சோதி பாண்டிக் கொடுமுடி
நாவ லாஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 3

எல்லை யில்புகழ் எம்பிரான் எந்தை தம்பி ரான்என்பொன் மாமணி
கல்லை யுந்தி வளம்பொ ழிந்திழி காவி ரியதன் வாய்க்கரை
நல்ல வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
வல்ல வாஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 4

அஞ்சி னார்க்கர ணாதி என்றடி யேனும் நான்மிக அஞ்சினேன்
அஞ்ச லென்றடித் தொண்ட னேற்கருள் நல்கி னாய்க்கழி கின்றதென்
பஞ்சின் மெல்லடிப் பாவை மார்குடைந் தாடு பாண்டிக் கொடுமுடி
நஞ்ச ணிகண்ட நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 5

ஏடு வான்இளந் திங்கள் சூடினை என்பின் கொல்புலித் தோலின்மேல்
ஆடு பாம்ப தரைக்க சைத்த அழக னேஅந்தண் காவிரிப்
பாடு தண்புனல் வந்தி ழிபரஞ் சோதி பாண்டிக் கொடுமுடிச்
சேட னேஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 6

விரும்பி நின்மலர்ப் பாத மேநினைந் தேன்வி னைகளும் விண்டன
நெருங்கி வண்பொழில் சூழ்ந்தெ ழில்பெற நின்ற காவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதை மார்குடைந் தாடு பாண்டிக் கொடுமுடி
விரும்ப னேஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 7

செம்பொ னேர்சடை யாய்தி ரிபுரந் தீயெ ழச்சிலை கோலினாய்
வம்பு லாங்குழ லாளைப் பாக மமர்ந்து காவிரிக் கோட்டிடைக்
கொம்பின் மேற்குயில் கூவ மாமயில் ஆடு பாண்டிக் கொடுமுடி
நம்ப னேஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 8

சார ணன்தந்தை எம்பி ரான்எந்தை தம்பி ரான்எம்பொன் மாமணீயென்று
பேரெ ணாயிர கோடி தேவர் பிதற்றி நின்று பிரிகிலார்
நார ணன்பிர மன்தொ ழுங்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடிக்
கார ணாஉனை நான்ம றக்கினுஞ் சொல்லும்நா நமச்சி வாயவே. 9

கோணி யபிறை சூடி யைக்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
பேணி யபெரு மானைப் பிஞ்ஞகப் பித்த னைப்பிறப் பில்லியைப்
பாணு லாவரி வண்ட றைகொன்றைத் தார னைப்படப் பாம்பரை
நாணனைத்தொண்டன் ஊரன் சொல்லிவை சொல்லு வார்க்கில்லை துன்பமே.10

திருச்சிற்றம்பலம்

## எட்டாம் திருமுறை திருவாசகம்




நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க

ஈச னடிபோற்றி எந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி

ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவன்என் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய

விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்

தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்

பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமும் இல்லானே உள்ளானே

அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்

மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேன்எம் ஐயா அரனேஓ என்றென்று

போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்ஆனார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே

அல்லற் பிறவி அறுப்பானே ஓஎன்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்.



# திருப்பள்ளியெழுச்சி

போற்றி! என் வாழ் முதல் ஆகிய பொருளே! புலர்ந்தது;
பூம் கழற்கு இணை துணைமலர் கொண்டு
ஏற்றி, நின் திருமுகத்து எமக்கு அருள் மலரும்
எழில் நகை கண்டு, நின் திருவடிதொழுகோம்
சேற்று இதழ்க் கமலங்கள் மலரும் தண் வயல் சூழ்
திருப்பெருந்துறை உறைசிவபெருமானே!
ஏற்று உயர் கொடி உடையாய்! எமை உடையாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! 1

அருணன், இந்திரன் திசை அணுகினன்; இருள் போய்
அகன்றது; உதயம் நின் மலர்த்திருமுகத்தின்
கருணையின் சூரியன் எழ எழ, நயனக்
கடி மலர் மலர, மற்று அண்ணல் அம்கண் ஆம்
திரள் நிரை அறுபதம் முரல்வன; இவை ஓர்
திருப்பெருந்துறை உறைசிவபெருமானே!
அருள் நிதி தர வரும் ஆனந்த மலையே!
அலை கடலே! பள்ளி எழுந்தருளாயே!' 2

கூவின பூம் குயில்; கூவின கோழி;
குருகுகள் இயம்பின; இயம்பின சங்கம்;
ஓவின தாரகை ஒளி; ஒளி உதயத்து
ஒருப்படுகின்றது விருப்பொடு, நமக்கு.
தேவ! நல் செறி கழல் தாள் இணை காட்டாய்!
திருப்பெருந்துறை உறை சிவபெருமானே!
யாவரும் அறிவு அரியாய்! எமக்கு எளியாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! 3

இன் இசை வீணையர், யாழினர், ஒருபால்;
இருக்கொடு தோத்திரம் இயம்பினர், ஒருபால்;
துன்னிய பிணை மலர்க் கையினர், ஒருபால்;
தொழுகையர், அழுகையர்,துவள்கையர், ஒருபால்;
சென்னியில் அஞ்சலி கூப்பினர், ஒருபால்.
திருப்பெருந்துறை உறை சிவபெருமானே!
என்னையும் ஆண்டுகொண்டு, இன் அருள் புரியும்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! 4

‘பூதங்கள்தோறும் நின்றாய்’ எனின், அல்லால்,
    ‘போக்கு இலன், வரவு இலன்,’ என,நினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல், ஆடுதல், அல்லால்,
    கேட்டு அறியோம், உனைக் கண்டு அறிவாரை.
சீதம் கொள் வயல் திருப்பெருந்துறை மன்னா!
    சிந்தனைக்கும் அரியாய்! எங்கள் முன்வந்து,
ஏதங்கள் அறுத்து, எம்மை ஆண்டு, அருள்புரியும்
    எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! 5

பப்பு அற வீட்டு இருந்து உணரும் நின் அடியார்,
    பந்தனை வந்து அறுத்தார்; அவர்பலரும்,
மைப்பு உறு கண்ணியர், மானிடத்து இயல்பின்
    வணங்குகின்றார். அணங்கின் மணவாளா!
செப்பு உறு கமலங்கள் மலரும் தண் வயல் சூழ்
    திருப்பெருந்துறை உறைசிவபெருமானே!
இப் பிறப்பு அறுத்து, எமை ஆண்டு, அருள்புரியும்
    எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! 6

அது, பழச் சுவை என, அமுது என; அறிதற்கு
    அரிது என, எளிது என; அமரரும்அறியார்.
இது அவன் திருஉரு; இவன், அவன்; எனவே
    எங்களை ஆண்டுகொண்டு, இங்கு எழுந்தருளும்,
மது வளர் பொழில் திரு உத்தரகோச
    மங்கை உள்ளாய்! திருப்பெருந்துறை மன்னா!
எது எமைப் பணி கொளும் ஆறு? அது கேட்போம்:
    எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! 7

முந்திய முதல், நடு, இறுதியும், ஆனாய்;
    மூவரும் அறிகிலர்; யாவர் மற்றுஅறிவார்?
பந்து அணை விரலியும், நீயும், நின் அடியார்
    பழம் குடில்தொறும் எழுந்தருளியபரனே!
செம் தழல் புரை திருமேனியும் காட்டி,
    திருப்பெருந்துறை உறை கோயிலும் காட்டி,
அந்தணன் ஆவதும் காட்டி, வந்து ஆண்டாய்!
    ஆர் அமுதே! பள்ளி எழுந்தருளாயே! 8

விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
    விழுப் பொருளே! உன தொழுப்பு அடியோங்கள்,
மண்ணகத்தே வந்து, வாழச் செய்தானே!
    வண் திருப்பெருந்துறையாய்! வழி அடியோம்

கண் அகத்தே நின்று, களிதரு தேனே!
கடல் அமுதே! கரும்பே! விரும்பு அடியார்
எண் அகத்தாய்! உலகுக்கு உயிர் ஆனாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! 9

புவனியில் போய்ப் பிறவாமையின், நாள் நாம்
போக்குகின்றோம் அவமே; இந்தப் பூமி,
சிவன் உய்யக் கொள்கின்ற ஆறு' என்று நோக்கி,
திருப்பெருந்துறை உறைவாய்! திருமால்ஆம்
அவன் விருப்பு எய்தவும், அலரவன் ஆசைப் படவும், நின்
அலர்ந்த மெய்க்கருணையும், நீயும்,
அவனியில் புகுந்து, எமை ஆட்கொள்ள வல்லாய்!
ஆர் அமுதே! பள்ளி எழுந்தருளாயே! 10

திருச்சிற்றம்பலம்

## ஒன்பதாம் திருமுறை




இடர் கெடுத்து என்னை ஆண்டுகொண்டு என்னுள்
இருட்பிழம்பு அறஎறிந்து எழுந்த
சுடர் மணி விளக்கின் உள்ளொளி விளங்கும்
தூயநற் சோதியுள் சோதீ !
அடல்விடைப் பாகா ! அம்பலக் கூத்தா !
அயனொடு மாலறி யாமைப்
படரொளிப் பரப்பிப் பரந்துநின் றாயைத்
தொண்டனேன் பணியுமா பணியே. 1

செங்கணா போற்றி திசைமுகா போற்றி
சிவபுர நகருள்வீற் றிருந்த
அங்கணா போற்றி அமரனே போற்றி
அமரர்கள் தலைவனே போற்றி
தங்கணான் மறைநூல் சகலமுங் கற்றோர்
சாட்டியக் குடியிருந் தருளும்
எங்கணா யகனே போற்றிஏ ழிருக்கை
யிறைவனே போற்றியே போற்றி 2

# திருப்பல்லாண்டு

தாதையைத் தாளற வீசிய சண்டிக்(கு)இவ் அண்டத்தொடும் உடனே
பூதலத் தோரு வணங்கப்பொற் கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும் நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 1

ஆரார் வந்தார் அமரர் குழாத்தில் அணியுடை ஆதிரைநாள்
நாரா யணனொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர் குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுதுமே. 2

# 10ஆம் திருமுறை

## திருமூலர் அருளிய திருமந்திரம்

அவனை ஒழிய அமரரும் இல்லை
அவன் அன்றிச் செய்யும் அரும் தவம் இல்லை
அவன் அன்றி மூவரால் ஆவது ஒன்று இல்லை
அவன் அன்றி ஊர் புகுமாறு அறியேனே. 1

முன்னை ஒப்பாய் உள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னை ஒப்பாய் ஒன்றும் இல்லாத் தலைமகன்
தன்னை அப்பா எனில் அப்பனும் ஆய் உளன்
பொன்னை ஒப்பு ஆகின்ற போதகத் தானே. 2

தீயினும் வெய்யன் புனலினும் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருள் அறிவார் இல்லை
சேயினும் நல்லன் அணியன் நல் அன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே. 3

யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போது ஒரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்உரை தானே 4

பிறப்பு இலி பிஞ்ஞகன் பேர் அருளாளன்
இறப்பு இலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பு இலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பு இலி மாயா விருத்தமும் ஆமே. 5

உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே 6

ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே! 7

வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே 8

வேதம் உரைத்தானும் வேதியன் ஆகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே 9

அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பு இலி வள்ளலை ஊழி முதல்வனை
எப் பரிசு ஆயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப் பரிசு ஈசன் அருள் பெறலாமே. 10

மாணிக்கத்து உள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத்து உள்ளே மரகத மாடமாய்
ஆணிப் பொன் மன்றினில் ஆடும் திருக் கூடத்தைப்
பேணித் தொழுது என்ன பேறு பெற்றாரே. 11

கொல்லிடு குத்து என்று கூறிய மாக்களை
வல்லடிக் காரர் வலிக் கயிற்றால் கட்டிச்
செல்லிடு நில் என்று தீவாய் நரகு இடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே. 12

குருவே சிவம் எனக் கூறினன் நந்தி
குருவே சிவம் என்பது குறித்து ஓரார்
குருவே சிவனும் ஆய்க் கோனும் ஆய் நிற்கும்
குருவே உரை உணர்வு அற்றது ஓர் கோவே. 13

கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வரே யாம் ஆகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்காரம் ஆன திருவடி சேர்வரே. 14

ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
ஆரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே. 15

அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே 16

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதல் பூதமே 17

திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே 18

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான் பற்றிப்பற்றத் தலைப்படும் தானே 19

சிவ சிவ என்கிலர் தீ வினை யாளர்
சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்
சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவ சிவ என்னச் சிவகதி தானே. 20

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன்ஐந்தும் காளா மணிவிளக்கே. 21

புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றார்களே. 22

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனி உண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக்கு இடர் உற்ற வாறே. 23

மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூலன் உரைசெய்த முன்னூறு மந்திரம்
மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றாமே 24

வாழ்கவே வாழ்களன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலம்அறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலம்இலான் பாதமே. 25

## பதினொன்றாம் திருமுறை

இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும்நெறி பணியா ரேனும் – சுடர்உருவில்
என்பறாக் கோலத் தெரியாடும் எம்மனார்க்கு
அன்பறா தென்நெஞ் சவர்க்கு.

கண்ணாரக் கண்டும் என் கையாரக் கூப்பியும்
எண்ணார எண்ணத்தால் எண்ணியும் – விண்ணோன்
எரியாடி என்றென்றும் இன்புறுவன் கொல்லோ
பெரியானைக் காணப் பெறின்.

# பன்னிரெண்டாம் திருமுறை

## பெரிய புராணம்

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு உலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் 1

திருவாளன் திருநீறு திலகவதி யார்அளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவார அணிந்துதமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார் 2

ஆதியாய் நடுவும் ஆகி அளவுஇலா அளவும் ஆகி
சோதியாய் உணர்வும் ஆகி தோன்றிய பொருளும் ஆகி
பேதியா ஏகம் ஆகி பெண்ணுமாய் ஆணும் ஆகி
போதியா நிற்கும் தில்லை பொது நடம் போற்றி போற்றி 3

நண்ணிய தவ சிவ யோக நாதரை
கண்ணுற நோக்கிய காதல் அன்பர் தாம்
புண்ணிய தொண்டர் ஆம் என்று போற்றி செய்து
எண்ணிய வகையினால் எதிர்கொண்டு ஏத்தினார் 4

சொல்லுவது அறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லை வந்து அருளி என்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லைஇல் இன்ப வெள்ளம் எனக்கு அருள்செய்தாய் போற்றி
தில்லை அம்பலத்து உள் ஆடும் சேவடி போற்றி என்ன 5

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க என்றார் 6

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்று ளார்அடி யாரவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம். 7

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.

# 8. சிவஞான போதம்

### சிறப்பு பாயிரம்

மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் இருள்தீர்ந்து

அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வுஅற நந்தி முனிகணத்து அளித்த
உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்

பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

## மங்கல வாழ்த்து

கல்லால் நிழன்மலை வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர் நல்லார் புணைவரே

## அவையடக்கம்

தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை உடைமை எமை இகழார் – தம்மை
உணரார் உணரார் உடங்குஇயைந்து தம்மில்
புணராமை கேளாம் புறன்

## முதல் சூத்திரம்

அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்

## இரண்டாம் சூத்திரம்

அவையே தானே ஆய், இரு வினையிற்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே

## மூன்றாம் சூத்திரம்

உளதுஇலது என்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படின்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திரத் தனுவினுள் ஆன்மா

## நான்காம் சூத்திரம்

அந்தக் கரணம் அவற்றினொன்று அன்று அவை
சந்தித்தது ஆன்மாச் சகச மலத்து உணராது
அமைச்சுஅரசு ஏய்ப்பநின்று அஞ்ச அவத்தைத்தே

## ஐந்தாம் சூத்திரம்

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்து அறிந்து அறியா ஆங்குஅவை போலத்
தாம்தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பசாசத்து அவையே

## ஆறாம் சூத்திரம்

உணருரு அசத்து எனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத்தாம் என
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே

## ஏழாம் சூத்திரம்

யாவையும் சூனியம் சத்துஎதிர் ஆகலின்
சத்தே யறியாது அசத்துஇலது அறியா
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா

## எட்டாம் சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே

## ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத்
தண் நிழலாம் பதிவிதி எண்ணும் அஞ் செழுத்தே

## பத்தாம் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகன் ஆகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே

## பதினொன்றாம் சூத்திரம்

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே

## பன்னிரண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மால்அற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தாமும் அரன் எனத் தொழுமே

# 9. இல்லத்தில் சிவ வழிபாடு செய்வது எப்படி?

தினமும் காலை எழுந்தவுடன் நம் உடல் தூய்மை செய்து கொண்டு, நந்தவனத்தில் புதியதாக பூத்த மலரை குற்றமில்லாமல் பறித்து வந்து நம் பூசை அறையில் உள்ள சுவாமி படங்களுக்கு இட்டு வழிபாடு செய்து விட்டுப் பின்னர் தான் நாம் உணவு அருந்துவது மரபு. நம் பூசை அறையில் உள்ள எல்லா தெய்வ படங்களுக்கும் மேலே சிவபெருமான் படம் வைக்க வேண்டும். சிவபெருமான் ஒருவரே பிறப்பு இறப்பு இல்லாத தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாக விளங்குபவர். சுவாமி படங்களுக்கும் திருவுருவங்களுக்கும் மலர்கள் இட்டபின், திருவிளக்கை ஏற்ற வேண்டும். அப்போது,

**இல்லக விளக்கது விருள்கெ டுப்பது**
**சொல்லக விளக்கது சோதி யுள்ளது**
**பல்லக விளக்கது பலருங் காண்பது**
**நல்லக விளக்கது நமச்சி வாயவே.**

என்ற தேவாரப் பாடல் பாடவும். சிவபெருமான் திருவுருவங்களில் எழுந்தருள விண்ணப்பம் செய்து மலர் தூவி வழிபட வேண்டும். பின்னர் இறைவனுக்கு திருவடி நீர், உட்கொள்ள நீர், உச்சியில் நீர் விடுக. அப்போது தூபம் அல்லது ஊதுபத்தியை மூன்று முறை வலமாகக் காட்டி மலர் இடுக. அப்போது,

**சலம், பூவொடு, தூபம், மறந்து அறியேன்;**
**தமிழோடு இசைபாடல்மறந்து அறியேன்;**
**நலம் தீங்கிலும் உன்னை மறந்து அறியேன்;**
**உன் நாமம் என் நாவில் மறந்து அறியேன்;**
**உலந்தார் தலையில் பலி கொண்டு உழல்வாய்!**
**உடலுள் உறு சூலை தவிர்த்து அருளாய்!**
**அலந்தேன், அடியேன்;—அதிகைக் கெடில**
**வீரட்டானத்து உறை அம்மானே!**

என்ற திருநாவுக்கரசர் தேவாரம் பாடுக. அடுத்து, திருப்படங்களுக்கு விளக்கு காட்டும் போது,

**பெரும் புலர் காலை மூழ்கிப் பித்தற்குப் பத்தர் ஆகி**
**அரும்பொடு மலர்கள் கொண்டு ஆங்கு ஆர்வத்தை உள்ளே வைத்து**
**விரும்பி நல் விளக்குத் தூபம் விதியினால் இட வல்லார்க்குக்**
**கரும்பினில் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனாரே.**

என்று பாடவும். பின்னர் இறைவனுக்கு அமுது (கற்கண்டு, உலர்திராட்சை, கனிகள், தேங்காய், பழம் என்று ஏதாவது ஒன்று) செய்வித்து,

**அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்**
**பொன்னம் பாலிக்கும்; மேலும், இப் பூமிசை**
**என் நம்பு ஆலிக்கும் ஆறு கண்டு, இன்பு உற**
**இன்னம் பாலிக்குமோ, இப் பிறவியே?**

என்று பாடவும். பின்னர் ஓம் என்ற வடிவில் தீபஒளி காட்டி,

**கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி**
**அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாஞ்**
**சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்துள் நின்று**
**பொற்புடன் நடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி**

என்று பாடி, இறைவனை போற்றி செய்க.

**வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி**
**மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி**
**ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி**
**ஓவாத சத்தத் தொலியே போற்றி**
**ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி**
**ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி**
**காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி**
**கயிலை மலையானே போற்றி போற்றி.**

பின்னர், பன்னிரு திருமுறைகளை எவ்வளவு ஓத முடியுமோ, அவ்வளவு ஓதவும். பின்னர், நாம் செய்த பிழைகளை பொறுத்தருளுமாறு வேண்டவும்

**பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை,**
**போகமும் திருவும் புணர்ப்பானை,**
**பின்னை என் பிழையைப் பொறுப்பானை,**
**பிழை எலாம் தவிரப் பணிப்பானை,**
**இன்ன தன்மையன் என்று அறிவு ஒண்ணா**
**எம்மானை, எளி வந்த பிரானை,**
**அன்னம் வைகும் வயல்–பழனத்து அணி**
**ஆரூரானை, மறக்கலும் ஆமே? .**

நிறைவாக, எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும், சைவ நெறி தழைத்தோங்கவும் விண்ணப்பஞ் செய்து, சைவ முழக்கமிட்டு வழிபாட்டை நிறைவு செய்யவும்.

**வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்**
**கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க**
**நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க**
**மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்.**

## 10. கிரிவலம் மற்றும் யாத்திரை ஐந்தெழுத்து முழக்கம்

சிவாய நம ஓம் சிவாய நம ஓம்
சிவாய நம ஓம் சிவாய நம ஓம்
அண்ணாமலை சிவ சிவாய நம ஓம்
அருணாசல சிவ சிவாய நம ஓம்
ஆலங்காடா சிவாய நம ஓம்
ஆரூர் அரசே சிவாய நம ஓம்
இன்னம்பர் ஈசா சிவாய நம ஓம்
இன்றெனக் அருள்வாய் சிவாய நம ஓம்

ஈங்கோய் மலையாய் சிவாய நம ஓம்
ஈங்கெழுந்தருள்வாய் சிவாய நம ஓம்
உண்ணாமுலை சிவ சிவாய நம ஓம்
உண்மைப்பொருளே சிவாய நம ஓம்
ஊனம் ஒன்றில்லாய் சிவாய நம ஓம்
ஊழி ஏழானாய் சிவாய நம ஓம்
எழுத்தறி நாதரே சிவாய நம ஓம்
என்றும் இளையாய் சிவாய நம ஓம்
ஏகம்பம் மேயாய் சிவாய நம ஓம்
ஏடகத்துறைவாய் சிவாய நம ஓம்
ஐந்தெழுத்து உருவாய் சிவாய நம ஓம்
ஐயாறு மேயாய் சிவாய நம ஓம்
ஒற்றியூர் உள்ளாய் சிவாய நம ஓம்
ஒண்பொருளே சிவ சிவாய நம ஓம்
ஓண காந்தேஸ்வர சிவாய நம ஓம்
ஓலம் அடிகேள் சிவாய நம ஓம்
சிவாய நம ஓம் அபாயம் யாவும் போம்
அபாயம் யாவும் போம் உபாயம் அறிவோம்
உபாயம் அறிவோம் உள்ளம் அது தெளிவோம்
உள்ளமது தெளிவோம் சிவாய நம ஓம்
சிவ சிவ என்போம் சிவகதி பெறுவோம்
அர அர என்போம் அவன் தாள் பணிவோம்



## 11. அருஞ்சொற்பொருள்



| | |
|---|---|
| பிடி– பெண் யானை | மட்டு– கள் |
| கரி, களிறு– ஆண் யானை | கூற்று– கூற்றுவன், எமன் |
| பூழியர்கோன்– பூமிக்கு அரசன் | போது– மொட்டு, மலர் |
| முழவு– இசைக்கருவி | ஐயாறு– 5 ஆறுகள், திருவையாறு |
| அனாதி– முதலும் முடிவுமற்றது | நொடித்தான்மலை– கயிலாயம் |
| புகலி, கழுமலம்– சீர்காழி | மால்– திருமால் |
| போதம்– ஞானம், அறிவு | அயன்– பிரம்மன் |
| புனல்– ஆறு, நீர் | கொற்றவன்– மாமன்னன் |

புன்மை– சிறுமை, இழிவு.

தக்கோர்– அறிஞர்

கவின்–அழகு.

சேணம்– பொறுப்பான இடம்

பூசுரன்– பிராமணன்

குண்டிகை– கமண்டலம்

சாக்கியர்– சூரிய குல சத்திரியர்

வார்சடை– நீண்ட சடை

மேயவனே– உறைபவனே

கனைத்தெழுந்த– அதிர வைத்து எழுந்த, முழுங்கிய

நிமலா– குற்றமற்ற, தூயவன்

வவ்வேல்– வல் + வேல்.

வல் – சீக்கிரம்.

அடல்– வலிமைமிக்க, வீரியமிக்க

அவிர்சடை– ஒளிவீசும் சடை

பாங்கினல்லார்– குணமுடையவர்

படிமம்– தவவேடம்

விருத்தன்– முதியவர்

கருத்தனாகி– முழுமுதற்கடவுள்

அருத்தன்– பொருளானவன்

நிருத்தம்– நடனம்

நிருத்தர்– நடனமாடுபவர்

கீதர்– பாடுபவர்

அருவரை– மலை

அருங்கலம்– சிறப்பு அணிகலன்

கோட்டமில்லது– குற்றமில்லாது

அழல்– நெருப்பு, தீக்கொழுந்து

நண்ணி– நெருங்கி, அணுகி

இரந்து– கெஞ்சி பெறுதல்

ஆறங்கம்– வேதாங்கம் ஆறு

தாள்– திருவடி

கழல்– பாதம், திருவடி

கோகழி– **திருப்பெருந்துறை**

குருமணிதன்–குருவாகிய மாணிக்கம்

ஏகன்– ஒருவன்

அநேகன்– பலவாக இருப்பவன்

பிஞ்ஞகன்– நீண்ட சடையோன்; அணுவிலும் உறைபவன்; சிவன்

சேயோன்– தூரத்தில் இருப்பவன்

கோன்– அரசன்

தேசன்– ஒளிமயமானவன்

நுதல்– நெற்றி

கண்ணுதல்– நெற்றிக்கண்

மிக்காய்– கொண்டுள்ள(வன்)

விருகம்– மிருகம்

வீடுபேறு– முக்தி

விடை– காளை; நந்தி

விடைப்பாகன்– சிவன்

நேயம்– அன்பு

நிமலன்– அழுக்கற்றவன்

சீர்– செல்வம், நன்மை, அழகு, பெருமை, புகழ், இயல்பு.

இயமானன்– யாகம் செய்பவன்

பெம்மான்– பெருமான்

கன்னல்– கரும்பு

தேற்றனே– தெளிவானவனே

குரம்பை– உடல்

நாற்றம்– மணம், வாசனை

வேழம்– யானை

கேழல்– ஆண் பன்றி

துஞ்சல்– சுயநினைவில்லா நிலை

| | |
|---|---|
| சலமிலன்– குற்றமற்றவன் | சேடர்– சேணியர் என்னும் செட்டி |
| விழுமிய– செழித்த, வளமான | இனத்தவர்; பண்புடையோர் |
| இல்லக விளக்கது– புறவிளக்கு | மறுகு– குறுந்தெரு |
| அகவிளக்கு– நமசிவாய | பனுவல்– நூல் |
| மாப்பிணை– மான்குட்டி ஏந்திய | ஒக்கும்– ஒப்பாகும் |
| தில்லை– தி ?ல்லைமரம், சிதம்பரம் | பதி– இறைவன் (ஒருவனே) |
| சென்னி– தலைக்கு 1 அடி மேலே | பசு– உயிர்கள் (எண்ணற்றவை) |
| தண்– குளிர்ச்சி பொருந்திய | பாசம்– சடப்பொருள் (ஆணவம், |
| எயில்– கோட்டை | கன்மம், மாயையாகிய மூன்றும்) |
| அமண், சமண்– சமணர்கள் | தாதை– தந்தை |
| ஏதுக்கள்– காரணம், நிமித்தம் | உம்பர்– தேவர்கள், விண்ணோர் |

# 12. அடுத்து என்ன செய்வது ?

ஒவ்வொரு நொடியாகக் கரைந்து கொண்டிருக்கும் நம் வாழ்வில் அடுத்து நாம் செய்வது யாது ? பல்லாயிரம் ஆண்டு காலமாக இறைவனை ஆராய்ச்சி செய்த நம் முன்னோர்களுக்கு இறைவனே பல்வேறு உபதேசம் செய்து அருளிய பெருங்கொடை சைவசமயம். சைவ சமயத்தின் மைய கருத்தான சித்தாந்த சைவத்தை அறிந்து உணர்தலும், நம் தமிழ் வேதமாகிய பன்னிரு திருமுறைகளை தினமும் உரிய பண்ணோடு பயிற்சி எடுத்து ஓதுவதும், நம் அருளாளர்களின் வரலாற்றை உணர்ந்து கொண்டு அதை நம் அடுத்த தலைமுறையினருக்கு எடுத்துச் செல்வதும், நூற்றுக்கணக்கான சிவாலயங்களுக்குச் சென்று வழிபாடு செய்வதும், திருவிழாக்களில் பங்கெடுத்துக் கொள்வதும், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறிகளில் நின்று சிவதொண்டுகள் செய்வதும்,தீக்கை எடுத்துக்கொண்டு நெறிமுறையோடு வாழ்வதும், எங்கும் நம் தமிழ் மொழியை குற்றமற நன்கு பயன்படுத்துவதும், நாம் அடுத்து செய்யத் தகுந்த செயல்களாகும். நம் முன்னோர்கள் காட்டிய சைவ நெறியை மரபு பிறழாமல் கடைப்பிடிப்பது மிகவும் அவசியமானதாகும். நெறியில் வழுவில் நெருஞ்சில் குத்தும் என்பது திருமூலர் வாக்கு. திருமுறை பயிற்சி வகுப்புகள், சித்தாந்த வகுப்புகள், திருவிழாக்கள், எண்ணற்ற சொற்பொழிவுகள், கருத்தரங்கம், ஆய்வரங்கம், புத்தக திருவிழா என்று எண்ணற்ற நிகழ்வுகளில் பங்கெடுத்துக் கொண்டு மேன்மை அடையலாம். நம் நெறியை நாம் கற்கும் போது, நம் அடுத்த தலைமுறையினருக்கு சிறு வயதிலிருந்தே அதை கல்வி,

அன்போடு ஊட்டி வளர்ப்பது ஒவ்வொரு பெற்றோரின் இன்றியமையாத தலையாய கடமையாகும். இவை அனைத்தும் எல்லாம் வல்ல சிவபெருமான் மீது அன்பு வைத்து அவனோடு உறவு கொண்டால் மட்டுமே கைகூடும். சிவன் பால் அன்பே ஞானம். அன்பே சிவம். இவற்றை செய்ய மனதில் நினைத்தாலே, பெருமான் குழந்தையை கை பிடித்து அழைத்து செல்வது போல் நமக்கு வழிகாட்டி அழைத்துச் செல்வார் என்பது திண்ணம்.

**உலகின் வீதிகள் தோறும் சைவ பாடசாலைகள் அமைப்போம்.**

**மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்**

**http://www.saivasamayam.in**

திருச்சிற்றம்பலம்.

## புத்தக தொடர்புக்கு :

# திருநந்திதேவர் சிவனடியார் திருக்கூட்டம்

5/49, வினோபா நகர், சித்தாலபாக்கம், சென்னை – 600 131

**+91 – 9962993193**



காணிக்கை : ரூ.25/–

## சமயக் குரவர்கள்


திருஞானசம்பந்தர்


திருநாவுக்கரசர்


சுந்தரர்


மாணிக்கவாசகர்

## சந்தானக் குரவர்கள்


மெய்கண்டார்


அருணந்தி சிவம்


மறைஞான சம்பந்தர்


உமாபதி சிவம்

ஸ்ரீ கைலாஸ் பிரிண்டர்ஸ், சென்னை. போன் : 28611506/9444089506